மலர் 15
இதழ் 3[illegible]

# கல்கி

## பொருளடக்கம்

மன்மத ஞு
மாசி 14

பெப்ருவரி 26, 1956



மலர் 15
இதழ் 30

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஆண்டு
மாசி மீ 14

# வெறுப்பை ஒழிப்போம்!

தமிழ் ஜில்லாக்கள் தனிப்பட்டு நிற்க வேண்டும் என்றும், தமிழ் பேசாத எந்தப் பகுதி தமிழ் நாட்டுடன் சேர்ந்தாலும் தொந்தரவுதான்உண்டாகும் என்றும் திராவிடக் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், தமிழரசுக் கழகம், சோஷலிஸ்ட் கழகம் எல்லாரும் தீவிரமாக ஆட்சேபித்து வருகிறார்கள். முதன் மந்திரியாரும் அவ்வாறே எண்ணுவதாக இப்போது வைத்துக் கொள்ளலாம். நிதி மந்திரியும் வேறு சில மந்திரிகளும் இதைப்பற்றி வேறுவிதமான அபிப்பிராயங்கள் சொல்லி யிருக்கிறார்கள்.

பெப்ருவரி 20-ந் தேதி யன்று தட்சிண பிரதேச அமைப்பை எதிர்த்துக் கடையடைப்பும் அமைதியாகவே நடந்துவிட்டது. ஆயினும் யோசிக்க வேண்டிய விஷயங்கள் பல உண்டு. நாட்டின் முன்னேற்றத்துக்கு வேண்டிய பொருளாதார அம்சங்களைவிட நாட்டு மக்களின் பரஸ்பர அன்னியோன்னிய பாவம் மிக முக்கியம்.

'எனக்கு யாரும் வேண்டாம். பிறருடன் சேர்வதில் எனக்கு ரொம்ப சந்தேகம். தனித்து இருப்பதே நலம் என்று தோன்றுகிறது. நான் யோசனை கேட்ட நண்பர்களும் எனக்கு அதுவே சொல்லி வருகிறார்கள்' என்று சென்னை முதல் மந்திரியார் சொல்லிக் கொண்டே வந்தால், அவரைப் போன்ற மற்ற அண்டை நாட்டுத் தலைவர்களுக்கு எப்படி யிருக்கும்? வேண்டாம் என்று தள்ளுபவர்களிடம் நாம் ஏன் போய்ச் சேர வேண்டும், என்னைச் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று நாம் ஏன் கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று அவர்கள் விலகித்தான் போவார்கள். தங்களுக்குப் பக்கபலம் தேடிக் கொள்ளும் வேறு முயற்சியில் ஈடுபடுவார்கள்.

இதுவே இப்பொழுது நடந்து வருவதாகத் தெரிகிறது. சந்தேகத்திலிருந்து வெறுப்பு உண்டாகும்; வெறுப்பிலிருந்து கோபமும் இன்னும் பல கேடுகளும் விளையும். இது வளர்ந்து கொண்டே போனால் நம் நாட்டை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும். புது ராஜ்ய இணைப்பு ஏற்படா விட்டாலும் நம்முடைய ராஜ்யத்தை நாம் எப்படியோ சமாளித்துக் கொள்ளலாம் என்பது இருக்கவே இருக்கிறது. ஆனால் 'வருகிறேன்' என்று சொல்லுபவர்களை 'வேண்டாம்' என்று தூரத் துரத்தியும், பல காரணங்கள் சொல்லி துவேஷத்துக்கு இடந்தருவது தவறு.

மலையாள ஜில்லா இன்னும் வேறுபடவில்லை. சென்னை ராஜ்யத்தில்தான் இருந்து வருகிறது. மலையாளத்தார்கள் பல அந்தஸ்தினர்களும், பல தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களும் சென்னை ராஜ்யத்தில் இருந்தே வருகிறார்கள். பாரத தேசப் பொது உரிமையை அவர்கள் இழந்து விடவில்லை. ஆயினும் இந்த ராஜ்யப் புது அமைப்பு விஷயத்தின் பயனாக, அவர்களைப் பற்றித் தகாத முறையில் பகிரங்கமாகவும், திண்ணைப் பேச்சிலும் சர்ச்சை நடந்து வருகிறது. இது நாட்டிற்கு நல்லதல்ல.

வகுப்புத் துவேஷமுண்டாக்கும் செயல்களையும் பேச்சுக்களையும் சட்டம் மிகக் கடுமையான தண்டனைக்குள்ளாக்குகிறது. ராஜ்யங்களுக்கு இடையில் அல்லது மக்கள் கூட்டங்களுக்கு இடையில் வெறுப்பு வளர்ந்தால் இந்திய ஆட்சி சரிவர நடைபெறாது. நிலைமை கெட்டுப் போயிற்று என்று, அதைக் கவனிக்கும் பொறுப்பை மத்திய அரசாங்கத்தார் எடுத்துக் கொள்ளும் வரை நாம் விட்டுவிடக் கூடாது. மக்கள் மனப்பான்மை சீர்கெட்டுப் போனால் அனைவருக்கும் நஷ்டம்.

நம்முடைய ராஜ்யமும் நாடும் சிறுகிப் போய்ச் சிறைப்பட்டுக் கிடந்தாலும், சுற்றிலுமுள்ளவர்களுடைய வெறுப்பையும் சம்பாதித்துக் கொள்ள வேண்டுமா என்று நிதானமாக யோசித்து நடந்து கொள்ள வேண்டும். பாரதப் பண்பாடு ஒன்று என்பதை மறந்து விடலாகாது. அதுவே சுயராஜ்யத்திற்கு ஆதாரம் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இந்திய நாட்டில் பல மொழிகளும், பல

சமயங்களும் இருந்த போதிலும் பாரதப் பண்பாடு ஒன்றேதான். அதற்கு மொழியின் பெயர்களைக் கொடுத்து, மக்களைத் தனியாகப் பிரித்து வேறுபடுத்தி, நிலைமையைச் சிக்கலாக்குவது மிகத் தவறாகும்.

நாம் எத்தனை உயர்வும் நலமும் அடைந்தாலும், அது பாரத நாட்டின் பூரண முன்னேற்றத்தின் இலையே யாகும் என்பதை மறந்து விடக் கூடாது. மரத்துக்கும் இலைக்கும் உள்ள தொடர்பை இழந்து விடலாகாது.

# மாணவர்களும் குடியரசும்

முன்னாட்களில் அரசர்கள் ஆட்சி புரிந்தார்கள். கத்தியின் பலத்தைக் கொண்டும் ராணுவ சாமர்த்தியத்தைக் கொண்டும் அவர்கள் ஆட்சி நடந்தது. இக்காலத்தில் உலகம் எங்கும் அரசுகள் மறைந்து மக்கள் குடியரசு புரிந்து வருகிறார்கள். மக்களின் குடியரசுக்குப் பலம் தேக பலம் அல்ல. பெரும்பாலோரின் ஆட்சியும் ஆதிக்கமும், சிறுபான்மை மக்களின் கல்வி பலத்தினால் நடைபெற்று வருகிறது. முற்காலங்களில் கல்விக்கு இருந்த ஸ்தானத்தைக் காட்டிலும் இப்போது நடைபெறும் குடியரசுகளில், கல்விக்கு மிக முக்கிய இடம் அமைந்திருக்கிறது. சரியான படிப்பும் பண்பாடும் குடியரசை நடத்தும் பிரதிநிதிகளுக்கு இல்லாவிடில், அஸ்திவார பலம் இல்லாமல் போகும். பெரும்பாலோர் ஆட்சி என்பது பெரும்பாலோரின் சம்மதம். அவ்வளவே. ஆனால் வண்டியை இழுக்கும் குதிரையைப் போல் குடியரசை நடத்துவது, நடத்துவோரின் சாமர்த்தியமே. சம்மதம் வேறு; இயங்கும் சக்தி வேறு. குடியரசுக்கு மக்களின் சம்மதமே போதும் என்று எண்ணுவது தவறு. வெற்றியுடன் நடைபெறும் ஒரு குடியரசின் ரகசியம், அந்தக் குடியரசில் நடக்கும் கல்வித் திறமையில் இருக்கிறது. குடியரசு வந்து விட்டது. இனிக் கல்வி வேண்டியதில்லை என்று எண்ணுவது மடமை. ஆனபடியால் சுதந்திர இந்தியாவில் கல்வியின் போக்கைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். கெட்டுப் போக விடக் கூடாது. சொந்த லாபத்துக்கு மட்டுமே அல்ல படிப்பு. நாட்டின் நன்மைக்காகப் படிக்கிறோம் என்கிற உணர்ச்சியோடு படிக்க வேண்டும் என்று ராஜாஜி சென்னை லயோலா கல்லூரி மாணவர் இல்லத்து ஆண்டு நிறைவு விழாவில் கூடியிருந்த மூவாயிரம் மாணவர்களுக்கு எடுத்துச் சொன்னார். மற்றொரு விஷயமும் சொன்னார்.

இயற்கையின் போக்கிலும் ஆண்டவன் இட்ட வழியிலும் நாம் துன்பமும் கஷ்டமும் படுவதாகத் தோன்றும். பல சமயங்களில் இப்படித் தோன்றினாலும் சில ஆண்டுகள் கழிந்த பின்னர், பின்னோக்கிப் பார்த்தால் எது கஷ்டமாகத் தோன்றிற்றோ, எது துயரமாகத் தோன்றிற்றோ, அதுவே நமக்குப் பலத்தைத் தந்ததாகக் காண்போம். அந்த அந்தக் காலத்தில் மிகப் பெரிதாகத் தோன்றும் சோதனைகளும் துயரங்களும் பிறகு சித்திரக் கனவாகத் தோன்றும். இளம் பிராயத்து மாணவர்கள் தங்களுக்கு ஏற்படும் கஷ்டங்களை இந்த உண்மையை உணர்ந்து பொறுத்துக் கொள்ள வேண்டும் என்றும் சொன்னார். இம்மாதிரித் தம்முடைய அநுபவத்தில் கண்ட பேருண்மைகளை வேறு யார் சொல்லக்கூடும்! இந்த உண்மைகளை யெல்லாம் உள்ளத்தில் தேக்கி மாணவர் குலம் உயர்ந்தோங்க வேண்டும் என்று விரும்புகிறோம்.

# மக்களின் திலகம்

பாரதத் தாய் மற்றும் ஒரு அருந் தவப் புதல்வரை இழந்து நிற்கிறாள். அறிவு, ஆற்றல், தேசபக்தி, ஒழுக்கம், கொள்கை ஆகிய எல்லா நற்பண்புகளும் ஒருங்கே அமையப் பெற்ற மற்றொரு அரும் பெருந் தலைவரைப் பாரத மக்கள் இழந்து விட்டார்கள்.



ஆசாரிய நரேந்திரதேவா அவர்கள் தமிழகத்தில் ஈரோடுக்கு அருகில் உள்ள பெருந்துறை ஸானடோரியத்தில் சிகிச்சை பெற்றுத் தேறி வந்தார். அந் நாட்களில், ஆசாரிய நரேந்திர தேவா அவர்கள் தாம் மிக்க ஈடுபாடு கொண்டிருந்த புத்த தர்மக் கொள்கைகளைப் பற்றி எழுதிக் கொண்டிருந்த "புத்த தர்ம தர்சன்" என்ற நூலின் கடைசி அத்தியாயங்கள் எழுதி முடிப்பதில் ஈடுபட்டிருந்தார். அந்த வேலையும் முடிந்தது. அந்த வேலை முடியும் வரை ஆண்டவன் பொறுத்திருந்தாற் போலிருந்து, அவரை அழைத்துக் கொண்டு விட்டார். அவர் வாழ்க்கையில் லக்னௌ சர்வகலாசாலைக்கு உப-அத்யக்ஷகராகவும் காசி ஹிந்து சர்வ கலாசாலைக்கு உப அத்யக்ஷகராகவும் இருந்து பல பணிகள் புரிந்திருக்கிறார். காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஈடுபட்டு நான்கு முறை சிறை சென்று தேச விடுதலைப் போரில் பெரும் பங்கு பற்றி யிருக்கிறார். தேசம் சுதந்திரம் அடைந்த பிறகு காங்கிரஸை விட்டு விலகி சோஷலிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். சோஷலிஸ்ட்

கட்சியின் தலைவராக இருந்தபோதே உயிர் நீத்தார். அவர் உயிர்நீத்த செய்தி கேட்டவுடன் பாரதப் பிரதமர் நேரு ஒரு தனி விமானத்தைக் கோவைக்கு அனுப்பி அவர் சடலத்தை அவர் சொந்த ஊராகிய லக்ஷ்மணபுரிக்குக் கொண்டு செல்ல ஏற்பாடு செய்தார். கோவை விமான நிலையத்திலும், ஹைதராபாத் விமான நிலையத்திலும் லக்ஷ்மணபுரியிலும் லட்சக்கணக்கான மக்கள் ஆசாரிய நரேந்திர தேவாவை தரிசித்துத் தங்கள் இறுதி மரியாதையைச் செலுத்தியிருக்கிறார்கள். சென்னை கவர்னர் ஸ்ரீபிரகாசா கண்ணீர் வெள்ளத்தில் ஆழ்ந்திருக்கிறார்.

அவர் எந்தக் கட்சியிலிருந்தாலும் அவர் கட்சிகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட மிக உயரிய மனிதர் என்பது பல கட்சித் தலைவர்கள் நெஞ்சுருகி விடுத்துள்ள அனுதாபச் செய்திகளிலிருந்தே தெரிகிறது. பாரத மக்களின் திலகம் போன்று திகழ்ந்த ஆசாரிய நரேந்திர தேவாவின் மறைவு பாரத நாட்டுக்கு ஈடு செய்ய முடியாத பெரும் நஷ்டமாகும்.

# ஆராய்ச்சி மன்னர் மறைந்தார்

சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் ஆராய்ச்சித் தலைவராகவும், லெக்ஸிகன் வெளியீட்டின் பிரதம ஆசிரியராகவும், தமிழ் நாட்டுக் கவிஞர்களின் காலங்களையெல்லாம் நிர்ணயிக்கும் ஆராய்ச்சியாளராகவும் விளங்கிய பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை மறைந்தார். தமிழ் நாட்டுப் புலவர்களின் பழைய பரம்பரைக்கு ஓர் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்கிய பெரியார் இறைவன் திருவடி அடைந்தார். ஆழ்ந்த புலமையும், எடுத்துக்கொண்ட பணியில் தீவிர ஈடுபாடும், விஷயங்களை எடுத்துச் சொல்லுகிற முறையில் அளவு கடந்த நிதானமும் கொண்டு விளங்கிய அந்தப் பெரும் புலவர் பெப்ருவரி 18ந்தேதி இரவு தமது பழந் தமிழ் நூல்களையும், ஏட்டுச் சுவடிகளையும், ஆராய்ச்சிக் குறிப்புகளையும் இந்தத்தமிழ் நாட்டிலே விட்டு விட்டு, விண்ணுலகு சென்றார்.



பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை தமது வாழ்நாளை வக்கீல் தொழிலில் ஆரம்பித்தார். ஆனால் அவருடைய தமிழார்வமும், மொழிப்புலமையும் அவரை அந்தத் தொழிலிலே மனம் செலுத்த முடியாமல் செய்தன. சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பீடம் அவரை அழைத்தது. அது முதல் கடைசி மூச்சு நிற்கும்வரை, ஆராய்ச்சி ஆராய்ச்சி என்று இரவும் பகலும் இடைவிடாமல் பணியாற்றியவர் அவர்.

ஆங்கிலம், வடமொழி, தமிழ் இந்த மூன்று மொழிகளிலும் உள்ள தமது புலமையின் மூலம் தமிழ் நாட்டுச் சரித்திரத்தையும், தமிழ்ப் புலவர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் ஆழ்ந்து ஆராய்ந்தார். அவருடைய ஆராய்ச்சியிலும் ஆராய்ச்சி முடிவுகளிலும், தமிழ் அறிஞர்கள் அனைவரும் அபார மதிப்புச் செலுத்திவந்தனர். வையாபுரிப் பிள்ளை அவர்கள் தமிழ் மொழிக்குச் செய்துள்ள சேவைமகத்தானது. அகச்சான்றுகளையும், புறச்சான்றுகளையும் ஒருங்கே கற்று, அவற்றின் உதவியைக் கொண்டு அவர் செய்த ஆராய்ச்சிக் குறிப்புக்களும், திருத்தமான பழந்தமிழ் வெளியீடுகளும், அவருடைய சரித்திர முடிவுகளும், பிற்கால அறிஞர்களுக்கு எத்தனையோ விதத்தில் பயன்படும். தமிழ் லெக்ஸிகன் என்றென்றும் அவருடைய பெயரைச் சொல்லும். 'புறத்திரட்டு' ஒரு நாளும் அவரை மறவாது. சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சித் துறையிலே அவருடைய எழுத்து எந்நாளும் மங்காமல் நிற்கும். எதிர்காலத்தில் தமிழ் நாட்டின் சரித்திரத்தை எழுதப் போகும் ஆசிரியர்கள் அனைவரும் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்களை மறக்க முடியாது. அவரை ஆராய்ச்சியின் மன்னர் என்றே கொண்டாடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

அட்டைப்படம்

# கும்பகோணத்தில் மகாமகம்

காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரையுள்ள ஹிந்துக்கள் அனைவரும் கும்பகோணத்தில் கூடுகிறார்கள். பாரத நாட்டில் 'ஒரு நாட்டு மக்கள்' என்ற உணர்ச்சி கிடையாது என்று கருதுபவர்களுக்கு வெளிச்சம் போடும் புண்ணிய தினம் மாசி மகாமகத் திருநாள். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வரும் இத் திருநாளைப் பாரத தேச வாசிகள் எத்தனையோ தலைமுறைகளாகக் கொண்டாடி வருகிறார்கள். பாரத நாட்டில் உள்ள ஒன்பது புண்ணிய நதி தேவதைகள் 'எங்கள் பாவம் போக வழி யென்ன!' என்று பரமேசுவரனை வேண்ட இந்தக் கும்பகோணத்தில் மகாமகத் திருநாளன்று நீராடினால் பாவம் போகும் என்று கூறினார். அப்படியே மகாமகம் தோறும் நதிக் கன்னிகைகள் எல்லாரும் வந்து நீராடுகிறார்கள் என்பது பாரத மக்களின் நம்பிக்கை.

காலங் கடந்த காலத்தே முதன் முதலில் ஒரு நதிக் கன்னிகை மகாமகக் குளத்திலே நீராடிப் புனிதமுற்ற காட்சியை நமது ஓவியர் மணியம் இந்த வார அட்டைச் சித்திரமாகத் தருகிறார்.

# என்ன சேதி!

## பம்பாயில் சங்கீத விழா

பம்பாயில் மூன்று ஆண்டுகளாக சங்கீதம், நடனம், நாடகம் முதலிய அருங்கலைகளுக்குத் தொண்டாற்றி வந்த பாரதிய மியூஸிக் அண்ட் ஆர்ட்ஸ் சொஸைடி தனது மூன்றாவது ஆண்டுவிழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடப் போவதையறிந்து மகிழ்கிறோம். இம் மூன்றாவது ஆண்டு பூர்த்தி விழாவை ஒன்பது நாட்கள் பல சங்கீத நிகழ்ச்சிகளுடன் கொண்டாடத் தீர்மானித்திருக்கிறார்கள். 2-3-56-ல் தொடங்கும் இவ்விழா 10-3-56 அன்று வரை நீடிக்கிறது. ஜனப் படேகுலாம் அலிகான், மகாராஜபுரம், ஆலத்தூர் சகோதரர்கள், மதுரை மணி, ஸ்ரீமதி வசந்தகுமாரி, ஸ்ரீமதி மிருணாளினி சாராபாய், குமாரிகள் சாயி, சுப்புலக்ஷ்மி முதலியவர்களின் சங்கீத, கலை நிகழ்ச்சிகளால் பம்பாய்த் தமிழர்களைக் குதூகலப்படுத்தச் சங்கத்தினர் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

இந்த நிகழ்ச்சிகள் நடைபெறப் பம்பாய் நப்பு மைதானத்தில் பிரத்தியேகமான பந்தல் வேறு போட்டிருக்கிறார்கள். இந்தக் கலை நிகழ்ச்சிகளில் வசூலாகும் பணம் எல்லாம் சங்கீதப் பள்ளிக்குச் செலவிடப்படும் என்று அறிகிறோம். பம்பாய்த் தமிழர்கள் ஏராளமாகச் சென்று சங்கீதப் பள்ளிக்கு உதவுவார்கள் என்று நம்புகிறோம்.

## பாகவெளிக்குப் பாராட்டு

காவேரிப்பாக்கம் அருகிலுள்ள பாகவெளி கிராமவாசிகளைப் பாராட்டுகிறோம். ஆம், அவர்கள் நல்ல முன் மாதிரியான தோர் காரியம் செய்திருக்கிறார்கள். அக்கிராமவாசிகள் கூடி இனி யாரும் கள்ளச் சாராயம் காய்ச்சக் கூடாது என்று முடிவு செய்திருந்தார்கள். அதை மீறிக் காய்ச்சிய நான்கு பேர்களுக்குக் கிராம வாசிகளே ரூ. 80 அபராதம் விதித்து, அத்தொகையை அவ்வூர் தர்மராஜா கோவிலுக்கு உதவியிருக்கிறார்கள். இவ்வாறு தேசபக்தியுடன் ஒவ்வொரு கிராமமும் நடந்து கொண்டால் கிராமக் கோவில்கள், குளங்கள், பள்ளிக்கூடங்கள் முதலியவற்றுக்குப் போதிய நிதி கிடைப்பதுடன், காந்தி மகானுக்கு உகந்த மதுவிலக்குத் திட்டமும் வெகு வெற்றிகரமாகவும் நிறைவேறும். கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்களைப் பார்த்து விட்டு, 'மதுவிலக்குச் சட்டம் வந்து என்ன பிரயோசனம்? சரியாக அமுலாகவில்லையே' என்று குறை கூறி வருகிறார்கள் சிலர். சட்டங்கள் மக்களுக்கு உதவவே செய்யப்படுகின்றன. சட்டம் வேறு; மக்கள் வேறு என்ற மனோபாவம் பொதுநலம் மிக்க மதுவிலக்குப் போன்ற காரியங்களில் கொள்ளுதல் தகாது. ஆகவே, குறை கூறும் வழக்கத்தைக் கைவிட்டு, பாகவெளி கிராம வாசிகளைப் பின்பற்றி மற்றக் கிராமவாசிகளும் நடந்து கொண்டால் கிராம ராஜ்யம் விரைவில் ஏற்பட்டு விடும். கிராம ராஜ்யமே ராமராஜ்யம் அல்லவா?

## கைத்தறி வாரம்

சென்னையில் கைத்தறி வாரம் இவ்வாண்டும் சென்ற இரண்டு ஆண்டுகளைப் போலவே சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள். கைத்தறி வாரத்தின் முக்கிய நோக்கமே கைத்தறித் துணிகளைப் பொது மக்களிடையே அதிகப் பிராபல்யப் படுத்துவதுதான். கைத்தறித் துணிகளுக்கு ரிபேட் தருவதன் மூலமும் வேறு பல வழிகளிலும் சென்ற இரண்டு ஆண்டுகளில் பாரத அரசாங்கம் சுமார் பதினொரு கோடி ரூபாய் கைத்தறித் தொழிலுக்காகச் செலவழித்திருக்கிறது. பாரத சர்க்கார் நமது கைத்தறித் துணிகளை பர்மா, மலேயா, சிங்கப்பூர், பாக்தாத், பிரிட்டன் முதலிய அன்னிய நாடுகளிலும் விற்க ஏற்பாடு

## காந்தி மண்டபத்தில்

பெப்ருவரி 24-ம் தேதி வெள்ளிக்கிழமை மாலை 5-30 மணிக்கு கிண்டி ராஜபவனத்தை அடுத்துள்ள காந்தி மண்டபத்தில் பிரார்த்தனைக் கூட்டம் ராஜாஜியின் தலைமையில் நடைபெறும். 5-30லிருந்து 6-15 மணி வரை நடைபெறும் நூற்பு யக்ஞத்தில் தக்கர் பாபா வித்யாலய மாணவர்கள் கலந்து கொள்வார்கள். சென்னை வித்வான் திரு பி. ஐ. நடேச பிள்ளை நாகஸ்வரம் வாசிப்பார்.

பின்னர் திருக் குர்ஆன், கிறிஸ்தவ துதிகீதம், கீதாவாசகம் முதலியன ஓதப்படும். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பிரார்த்தனை கீதங்கள் பாடுவார்.

ராஜாஜியின் சொற்பொழிவுக்குப் பின்னர் ராம நாம பஜனையுடன் கூட்டம் முடிவுறும். அன்பர்கள் அனைவரும் வருக!

# வண்டி ஓட வேண்டாமா?




செய்திருக்கிறார்கள். அந்த நாடுகளில் எல்லாம் நமது சென்னை ராஜ்யக் கைத்தறித் துணிகளுக்கு நல்ல பெயரும் கிராக்கியும் இருக்கின்றன என்று சென்னையில் கைத்தறிக் கண்காட்சியைத் திறந்து வைத்த பம்பாய் டெக்ஸ்டைல் கமிஷனர் திரு வி. நஞ்சப்பா கூறினார். சென்னை முதன் மந்திரி திரு காமராஜ் கைத்தறி வார விழாவைத் தொடங்கி வைத்துப் பேசுகையில், "கைத்தறித் துணிகளுக்கு நல்ல எதிர்காலம்" என்று குறிப்பிட்டார்.

## அராஜகத்துக்கு இடம் கொடாதீர்!

நாடு சுதந்திரம் பெற்று எட்டு ஆண்டுகள் ஆகி விட்டன. நாட்டின் சுபிட்சத்துக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டமும் வெளியாகி விட்டது! மக்களின் மகிழ்ச்சிக்கு வழி வகுக்கப்பட்டு வருகின்றது. ஆனாலும் அதே சமயத்தில் மக்களின் அமைதிக்குப் பங்கம் ஏற்படும் சில காரியங்கள் நடைபெறுகின்றன. எந்தக் காரணமும் இல்லாமலே பீதி ஏற்படும் நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

பெப்ருவரி பதினாலாம் தேதி சென்னை ஷெனாய் நகரில் ஒரு திடுக்கிடும் சம்பவம் நடைபெற்றது. பகல் பன்னிரண்டு மணியிலிருந்து மூன்று மணிக்குள்ளாக மூன்று கதவுகளை உடைத்து, உள்ளே இருந்த இரும்புப் பெட்டியையும் உடைத்துச் சுமார் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள தங்க நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் முதலியவைகள் கொள்ளை யடிக்கப்பட்டன.

பெப்ருவரி பதினெட்டாம் தேதி சென்னை ராயப்பேட்டை ஒயிட்ஸ் ரோடில் இதே போன்று இன்னொரு கொள்ளை. ஒரு முஸ்லிம் மாது தம்முடைய வீட்டைப் பூட்டி வைத்து விட்டுத் தம் உறவினர் வீட்டுக்குச் சென்றிருந்தார். திரும்பி வந்த போது வீட்டின் கதவுகள் உடைக்கப்பட்டுக் கொள்ளை யடிக்கப் பட்டிருந்ததைக் கண்டு திடுக்கிட்டார். கஷ்டப்பட்டுச் சேமித்த சுமார் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் பெறுமானமுள்ள தங்கநகைகளும், ரூபாய்களும் கொள்ளையடிக்கப் பட்டிருந்தன.

இந்தச் சம்பவங்கள் எல்லாம் எங்கோ போக்குவரத்து வசதி யில்லாத குக்கிராமத்தில் நடைபெற வில்லை. தமிழ் நாட்டின் தலைநகரமான சென்னை நகரில்தான் நடைபெற்றிருக்கின்றன. எட்டு மந்திரிகளும், மாகாணத்தின் தலைமைப் போலீஸ் அதிகாரிகளும் இருந்து ஆட்சி புரியும் தலைநகரில்தான் நடந்திருக்கின்றன.

சென்னை நகரிலேயே இப்படி இருக்கும் போது கிராமங்களைப் பற்றி என்ன சொல்வது? பெப்ருவரி 17உ விழுப்புரத்துக்



இலங்கையிலிருந்து இமயம் வரையில் உள்ள லட்சக் கணக்கான மக்கள் கும்பகோண மகாமகக் குளத்தில் மாசிமகத் தினத்தன்று புனித நீராடும் காட்சி.

கடுத்த தென்பேரி என்ற கிராமத்தில் ஒரு வீட்டில் திருடர்கள் புகுந்து 55,000 மதிப்புள்ள புரோ நோட்டுகளையும், இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் மதிப்புள்ள நகைகளையும், கரன்ஸி நோட்டுகளையும் கொள்ளையடித்துச் சென்றிருக்கின்றனர்.

இவை போன்ற சம்பவங்கள் நாட்டின் வறுமையையும் வேலை யில்லாக் கொடுமையையும்தான் காட்டுகின்றன என்று காரணம் கூறலாம். இருந்தாலும், கொள்ளைகளும் திருட்டுக்களும் நடைபெறுவதற்கு இடம் தரலாகாது. மனிதப் பண்பில்லாத இந்தக் குற்றங்கள் மேலே நடக்காமல் உடனே தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும். நமக்கென்ன வந்தது என்று அலட்சியமாக இருக்காமல் அக்கம்பக்கம் வீட்டில் உள்ளவர்கள் ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருக்க வேண்டும். குற்றங்களைக் கண்டு பிடிப்பதற்குப் போலீஸாருடன் பொது மக்களும் ஒத்துழைக்க வேண்டும். சுதந்திரம் பெற்ற நாட்டில் இவை போன்ற சம்பவங்கள் நடைபெற்றால் நாட்டில் சுபிட்சம் ஏற்படாது. நாட்டின் அமைதி குலைந்து அராஜகம்தான் ஏற்படும்.

# வட்ட மேஜை

## சுவைமிக்க பாடல்கள்

நான் நினைத்தேன்: தாங்கள் எழுதி வந்த 'ரவிசந்திரிகா' தொடர் சமீபத்தில்தான் ஆரம்பித்தாற் போலிருந்தது, அதற்குள் முடிந்து விட்டதே!' என்று. பிறகுதான் 'ரவிசந்திரிகா' ஆரம்பித்து 45 வாரங்கள் ஓடி விட்டன, நாம் கதையுடன் மூழ்கிக் கதை நிகழும் இடத்துக்கே சென்று விட்டோம். அதனால்தான் இவ்வளவு சீக்கிரம் முடிந்தாற் போலுள்ளது எனத் தெளிவுபெற்றேன். இத்தொடரின் மூலம் ஒரு ரஸிகனது வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்கள், சொக்கிருடி கலியாணப் பழக்கங்கள் ஆகிய விவரங்கள் தெரிய வந்தன. நல்ல நல்ல சுவைமிக்க நாடோடிப் பாடல்களை இடை இடையே சேர்த்திருப்பது மிக சுவாரஸ்யமாயிருந்தது. சிறியோரும் படிக்கும் வண்ணம் எளிய தமிழில் எழுதியதைப் பாராட்டுகிறேன். கதையைப் படிக்கும் போது கதை நிகழ்ச்சிகள் ஸினிமாப் படம் போல் மனத்தில் ஓடுகின்றன. இத்தகைய தொடர்களை மேன்மேலும் எழுத ஆசிரியர் அவர்களுக்கு எல்லாம் வல்ல இறைவன் நீண்ட ஆயுளைத் தருவானாக!

சென்னை
18—2—56

ந. ஜயராமன்

## கற்பகக் கனி

தற்சமயம் 'கல்கி'யில் முடிவுற்ற ரவிசந்திரிகா 'கல்கி' நேயர்களின் சித்தம் கலங்கச் செய்த, ரசமான சம்பவம் நிறைந்த ஒரு அழகான கதை. மேலும் கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியாகவும் உள்ளது. நம் முன்னோர்களின் நடை, உடை, பாவனை, நாகரிகம், பண்பாடு, தெய்வ வழிபாடு, வாழ்க்கைத்தரம் இவையெல்லாம் நமக்கு ஆசிரியர் பசுமரத்தாணி போல் பதிய வைக்கிறார்.

ரவிசந்திரிகாவில் பொருட்சுவை, சொற்சுவை, அருட்சுவை, தமிழ்ச்சுவை, சுவைக்கச் சுவைக்க வாயெல்லாம் கனிந்து அமுது ஊறுகின்றது. ரவிசந்திரிகாவில் வரும் பாடல்களை என்னென்று சொல்வது. பாட்டின் தரம், கடினம் இல்லாமலும், படித்த இளைஞர்கள் முதல் பாமரர் வரை தெரிந்து கொள்ளக் கூடிய முறையில் அருட் சுவையுடனும் விளங்குகிறது.

ஆசிரியர் திரு சோமு அவர்கள் மேன்மேலும் நமக்கு இது போன்ற முத்தமிழ்ச் சுவையுடன் கூடிய தொடர் கதையை வழங்கி வாரா வாரம் நம்மை எல்லாம் இன்பக் கடலில் திளைக்கச் செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

திருச்சேறை
18—2—56

டி. ஷண்முகம்

# மரப்பாலம்

"இது ஒரு காதல் கதை என்று நீங்கள் எதிர்பார்த்தால், நிச்சயம் ஏமாற்றம் அடைவீர்கள். அதனால் ஆரம்பத்திலேயே சொல்லி விடுகிறேன், இது ஒரு காதல் கதை இல்லை!" என்று பேச்சை ஆரம்பித்தார் எனக்கு எதிரே இருந்த அந்த நண்பர்.

"பரவாயில்லை! எந்தக் கதையானாலும் சரி. கேட்டு விடுகிறேன்!" என்று சொன்னேன், கேட்கா விட்டால் நம்மை விடப் போகிறாரா என்ன, என்ற நினைப்பிலே!

திருக் குற்றாலத்தில் செண்பகாடவிக்குப் போகிற பாதையிலே உள்ள புகழ் பெற்ற மரப் பாலத்தில், நாங்கள் இருவரும் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டிருந்தோம். எங்களோடு வந்திருந்த இன்னொரு வயதான நண்பர்–கிழவர் என்றே சொல்லலாம்–அந்தச் செண்பகாடவிக் குகையிலே இருந்த ஒரு சாமியாரோடு, 'அறுபது வயதுக்குப் பிறகு இளைஞராவது எப்படி!' என்ற அரும் பெரும் விஷயத்தைக் குறித்து ஆலோசனை செய்துகொண்டிருந்தார். 'காய கல்பம்' என்று சொல்லப்படுகிற சஞ்சீவியைக் குறித்து அவர்களுடைய பேச்சு தீவிரமாகி, ஏதேதோ பரிபாஷைகளிலே அவர்கள் இருவரும் இறங்கி விட்டதால், எனக்கும் எங்களோடு வந்திருந்த மூன்றாவது நண்பருக்கும் அங்கே இருப்புக் கொள்ள வில்லை. மரப்பாலம் வரை நடந்து விட்டு, மறுபடியும் குகைக்குத் திரும்பி வருகிறோம் என்று சொல்லித் தப்பித்துக்கொண்டு நாங்கள் மரப்பாலத்துக்கு வந்திருந்தோம். ஆனால் விதி யாரை விட்டது என்கிறீர்கள்! அங்கே காய கல்பத்திலிருந்து ஒரு வகையாகத் தப்பித்து வந்தால், இங்கே இந்த நண்பர் மரப்பாலத்திலே உட்கார்ந்து கதை சொல்ல ஆரம்பிக்கிறார்!




அந்த அத்துவானமான கானகத்தில் தன்னந்தனியாக நான் அவரோடு மல் யுத்தத்துக்குப் போக முடியுமா! மரியாதையாக அவர் சொல்லுகிற கதையைக் கேட்டு விடுவது தான் மனித தர்மம், தற்பாதுகாப்பும் கூட என்ற பாவனையில் செவிசாய்த்தேன்! ஆனால் அவரோ பீடிகையைப் பலமாகப் போட்டுக் கொண்டார். என்னைப் பார்த்தால் காதற் கதைகளைத்தான் உற்சாகத்தோடு கேட்பேன் என்று அவருக்குத் தோன்றியது போலிருக்கிறது!

"காதல் கதையாக இல்லாவிட்டாலும் பரவாயில்லை. ஆரம்பியுங்கள்!" என்றேன்.

"அதற்குச் சொல்ல வில்லை ஸார். நீங்கள் இளைஞர். இந்தக் காலத்து மாணவர்களுக்கு எந்தக் கதையிலும் காதல் வரவேண்டும்! இல்லாவிட்டால் சுவாரஸ்யப் படாது அவர்களுக்கு. அதிலும் நீங்கள் சட்டக் கல்லூரியில் படிப்பவராயிற்றே. அதனால் சட்ட விரோதமான காதல் கதைதான் உமக்குப் பிடிக்கும்!" என்றார் அவர், குறும்புத்தனமாகச் சிரித்துக் கொண்டே. எனக்குக் கோபம் வந்தது. வேறொரு இடமாக இருந்தால், என்னையும் என்னைப் போன்ற மாணவச் சகோதரர்களையும் பற்றி அவர் இந்த மாதிரிச் சொன்னதற்கு அவரை இலேசில் விட்டிருக்க மாட்டேன். ஆனாலும், இப்பொழுது என்ன செய்ய! நாங்கள் உட்கார்ந்திருந்ததோ தன்னந்தனியான இடம். பாலமோ மரப்பாலம்! கீழே ஓடிய நதியோ அருவியிலிருந்து அப்படியே சாடிக் கொண்டு ஆழமான கசத்திலே ஓடுகிறது! எனவே என்னுடைய மனக் கலவரத்தை அடக்கிக் கொண்டேன்! என்றாலும் நண்பர் என்னுடைய முகக் குறிப்பைக் கவனித்து விட்டார்!

"முற்றிலும் காதலே கலவாத கதை என்றும்

சொல்லிவிட முடியாது. ஆகையினால் தயவு செய்து கலவரம் அடையாதீர்கள்! யோசித்துப் பார்த்தால் இதை ஒரு காதல் கதை என்று வைத்துக் கொண்டாலும் பொருத்தந்தான்! ஆமாம்; நான் சொல்லப் போகும் கதை உண்மையிலேயே ஒரு காதல் கதைதான்! ஆனால் ஒரு புருஷனுக்கு ஒரு பெண்ணிடம் உண்டாகிற காதல் இல்லை. உண்மையில் காதல் என்ற வார்த்தைக்கு அது ஒன்றுதானா அர்த்தம்! இல்லவே இல்லை. நான் சொல்லப் போகும் கதை ஒரு மனிதனுக்கும் ஒரு மிருகத்துக்கும் உண்டான காதலைப்பற்றி! கதையைக் கேட்டு விட்டுப் பிறகு சொல்லுங்கள், இது காதல் கதையா இல்லையா என்று!"

'இவரிடம் வந்து இப்படிமாட்டிக் கொண்டோமே!' என்று நினைப்போடு பார்த்தேன்.

"பீடிகை நீண்டு விட்டது என்று நினைக்கிறீர்கள். தெரியும். இத்தனை பீடிகைக்கும் அவசியம் இருக்கிறது ஸார்! இல்லையென்றால் நீங்கள் நம்ப மாட்டீர்களே!"

இவ்வாறு சொல்லி விட்டு அந்த நண்பர் கதையை ஆரம்பித்தார். அவருடைய வியாக்கியானங்களையெல்லாம் எடுத்து விட்டுக் கதையைமட்டும் சுருக்கமாகக் கீழே தருகிறேன்.

## 2

ஓடி ஒளிந்து கொண்டான்! பிராகதார் இவனை வலைபோட்டு அரிக்க ஆரம்பித்தார். அவருடைய முயற்சி தீவிரம் ஆக ஆக, தங்கவேலனுடைய ஒளிவு மறைவுகளும், திருட்டுத்தனமும் தீவிரமாக ஆரம்பித்தன! போலீஸ்காரர்களுடைய நடமாட்டம் விருத்தியாக விருத்தியாக, தங்கவேலனுடைய சூழ்ச்சிகளும் விருத்தியாக ஆரம்பித்தன! ஒரு வருஷ காலத்தில் தங்கவேலன் பெரிய கொள்ளைக்காரனாகவே போய் விட்டான்!

கொள்ளைக்காரன் தங்கவேலனுக்குக் கூட்டாக யாரும் கிடையாது. பண்ணைகளில் வேலை செய்யும் உழைப்பாளிகள் எல்லாம் அவனுக்கு



உடந்தையாக இருந்து உதவி செய்வதாக ஊரிலே பேசிக் கொண்டார்கள். அதற்குக் காரணம் அவன் பணக்காரர்களைக் கொள்ளையடித்து, அந்தப் பொருளை காணல் காட்டுக்குள்ளே எடுத்துப் போகாமல் இரவுக்கு இரவே யாராவது ஏழை ஒருவனுடைய குடிசைக்குள்ளே, கூரையைப் பிளந்து கொண்டு உள்ளே போட்டு விட்டு ஓடிவிடுவான்! இப்படி ஒரு விசித்திரமான பழக்கம் அவனிடம் இருந்ததால், அவனைப் பிடிப்பது மிக மிகக் கஷ்டமாக இருந்தது என்று போலீஸ் இலாகாவிலே பேசிக் கொண்டார்கள். ஆனால் உண்மையான காரணமோ வேறு!

தங்கவேலனுக்குக் கூட்டாக வேறு எந்தத் துணைத் திருடனும் இல்லாத போதிலும், அவனிடம் ஒரு அதிசயமான வேட்டை நாய் இருந்தது. மோப்பம் பிடிப்பதில் அற்புதமான சக்தி படைத்திருந்த அபூர்வநாய் அது! தங்கவேலன் எங்கே போனாலும் அது கூடவே வரும். ஒரு வீட்டுக்குள்ளே பாய்ந்து சென்றுவிட்டான் என்றால், 'வெளியே நில்' என்று உத்தரவு போட்டால் வெளியே நின்று உளவு பார்க்கும். 'உள்ளே வா' என்றால் வாலைக் குழைத்துக் கொண்டே அவன் பின்னோடு ஓடும். அது வந்துவிட்டால் தெரு நாய்கள் எல்லாம் 'கப்சிப்' என்று வாயை அடைத்து உடம்பெல்லாம் ஒடுங்கிப் போய்ப் பதுங்கிக் கொள்ளும்! தங்கவேலனுடைய நாய் உறுமவே வேண்டாம். தலையைத் தூக்கி அப்படி ஒரு பார்வை பார்த்தது என்றாலே, போதும். எல்லாம் 'கப்சிப்!' அதனுடைய ஆற்றல் அத்தனை பிரசித்தம்!

போலீஸ்காரர்களுக்கு மெதுவாக நாயைப் பற்றிய இந்த இரகசியம் தெரியவந்தது! மற்றவர்களுக்கெல்லாம் தெரியவந்த பிறகே போலீஸ்காரர்களுக்குத் தெரிய வந்ததால், அவர்கள் அந்தத் தகவலைப் பற்றிச் சந்தேகப்படவில்லை. உண்மையாக இருக்கும் என்று நம்பிக் கொண்டார்கள். தவிரவும் அந்தக் காலத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தனிப் பெரும் பிரதிநிதியாக விளங்கிய ஒரு வெள்ளைக்காரத் துரையே, தங்க வேலனைப் பிடிப்பதற்கு என்றே கடல் கடந்து விசேஷ அதிகாரியாக வந்து, அவரே இந்த இரகசியத்தை ஊரார் மூலம் அறிந்து சொன்னதால், மற்றப் போலீஸ் அதிகாரிகள் ராஜ விசுவாசத்தோடு அதை அப்படியே நம்பி விட்டார்கள்! அதோடு நிற்கவில்லை. 'தங்க வேலனைப் பிடிப்பதற்கு முன், அந்த நாயைப் பிடிக்க வேண்டும்' என்று முனைந்தார்கள். அதை உயிருடனோ அல்லது உயிர் இல்லாமலோ, எப்படிக் கொண்டு வந்தாலும் சரி. கொண்டு வருபவன் போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவனாக இருந்தாலும் சரி; இல்லா விட்டாலும் சரி. அவனுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வெண்பொற் காசுகள் ஐந்நூறு வெகுமதி என்று பறை சாற்றினார்கள்.

ஆனாலும் நாய் பிடிபடுவதாகக் காணோம்!

"ஊரில் யாரும் அந்த நாயைப் பிடிக்க மாட்டார்கள். அந்த நன்றியுள்ள பிராணியிடம் மனிதர்களுக்கெல்லாம் அத்தனை நன்றி!" என்று பல பிரமுகர்கள் போலீஸ் துரையிடம் வந்து அரைகுறை இங்கிலீஷிலே சொன்னார்கள். முகஸ்துதி நிபுணர்களான சிலர் நல்ல சுத்தமான ஆங்கிலத்தில் சொன்னார்கள்: "அது ரோசமுள்ள நாய். பிடிபட்டால் துரையின் கையிலேதான் பிடிபடும்" என்று!

போலீஸ் துரை பலமாக யோசனை செய்தார். அதன் பேரில் குண்டுகள் போட்ட துப்பாக்கிகளைத் தாங்கியவர்களாய் நூறு பேர் அடங்கிய ஒரு பெரிய போலீஸ் படையைத் தனக்குத் துணையாக அமர்த்திக் கொண்டு காணற் காடுகளிலே 'டேரா' போட்டார்.

ஆங்கில அதிகாரியின் பாஷையிலே 'கேம்பிங்' என்பார்களே, அப்படிச் செப்பினால் தலை மயிரைச்





சீவுவது போல அந்த நாணற் காடுகளைச் சீவிச் சிறுக்கு எடுக்க ஆரம்பித்தார்கள் போலீஸ் படையினர்.

## 3

“பிடி! பிடி!” என்று ஒரு பலமான கூக்குரல் கேட்டது. அவ்வளவுதான். 'சடசட' என்று பூட்ஸுகளின் ஓசை எழுந்தது. 'டக் டக்' என்று துப்பாக்கிகள் உராய்ந்த சத்தம் கேட்டது.

'ஓடுங்கள்' என்று பிறந்தது ஒரு கம்பீரமான உத்தரவு. தடதட, மடமட என்று போலீஸ்காரர்கள் ஓடிய ஓசை!

நாணற் காட்டுக்கு மத்தியிலே ஒரு சிறு காட்டாறு. காவேரியிலிருந்து கிளைத்துக் கொண்டு எங்கெல்லாமோ ஓடி வளைந்து திரும்புகிற ஒரு சிறிய ஓடை அது. சிறிது என்றால், வயல் வரப்புகளிலே ஓடுகிற தண்ணீர் மாதிரியா! இல்லை. இரண்டு ஆள் ஆழம் இருக்கும். இறங்கி நடக்க முடியாது என்பது வெளிப்படை. நீரின் ஓட்டமோ கையை நீட்டினால் அந்தக் கையை மட்டும் அப்படியே சீவிக்கொண்டு போய் விடும். அத்தனை வேகமும் சுழிப்பும். அந்தக் காட்டோடையைக் கடந்துதான் தோப்புக்குள்ளே தங்கவேலனுடைய மறைவிடம்! தாண்டிப் போக முடியாத அளவு அகலமானதால் காட்டாற்றைக் கடப்பதற்கு ஒரு பனைமரத் துண்டை வெட்டி ஓடைக்குக் குறுக்கே போட்டிருந்தான். எதிரிகள் பின் தொடர்ந்தால், அந்த ஆபத்திலும் தப்பிக்க ஒரு வழி இருந்தது. அக்கரைக்குப் போனதும் பனைமரத்தை ஒரு எம்பி எம்பிக் காலால் உதைத்துத் தண்ணீரிலே தள்ளி விடலாம். பிறகு அவர்கள் வேறொரு மரப்பாலம் அமைத்து வருவதற்குள், அந்தத் தோப்புக்குள்ளே ஓடிச் சென்று விடலாம்! இப்பொழுது அந்த மரப் பாலத்தைப் போய்ச் சேர்ந்து விடுவது என்று ஓடினான் தங்கவேலன்.

“பிடி, பிடி!” என்று கூக்குரல். சுட்டால் குண்டு பிடிக்காத அளவுக்கு அத்தனை தொலையிலே ஓடிக் கொண்டிருந்தான் தங்கவேலன். அவனுடைய நாய்! பாவம், அதுவும் வேர்க்க வேர்க்க மூச்சு விட்டுக் கொண்டும், புகைந்து கொண்டும் ஓடிக் கொண்டிருந்தது.

தங்கவேலனுக்கு அத்தனை தைரியத்துக்குள்ளும் யோசனை பலவிதமாகப் போய்க் கொண்டிருந்தது. வேட்டை நாய்க்கு அந்தக் காட்டுக்குள்ளே ஒரே ஒரு பாதைதான் பழக்கம். ஆனால் அந்தப் பாதை இப்பொழுது போலீஸ்காரர்கள் பின்பற்றுவதற்குச் சுலபமான பாதையாயிற்றே. என்ன செய்வது!

ஒரு விநாடி தயங்கி நின்ற தங்கவேலனுக்குத் திடீரென்று ஏதோ எண்ணம் உதித்தது. அதிகமாக அந்த எண்ணத்தை மனத்துக்குள்ளே விமர்சனம் செய்யக்கூடிய சந்தர்ப்பம் இல்லை அது. திடீரென்று புதராக இருந்த நாணல்களுக்குள்ளே பாய்ந்தான். ஒளிந்தும், மறைந்தும், ஊர்ந்தும், பாய்ந்தும், பம்மியும், குதித்தும், துள்ளி ஓடியும், சாடிக் கொண்டு வந்து விட்டான் தங்கவேலன். இதோ மரப் பாலம்! பாலத்தைக் கடந்தான், கடந்து மறு கரைக்கு வந்து விட்டான். நாய்தான் பின் தங்கி விட்டது. ஆனால் இதென்ன; எங்கிருந்தோ போலீஸ் விசில் கேட்கிறதே; ஐயய்யோ! ஆபத்து இத்தனை அருகில் நெருங்குகிறதா! இந்த மரப்பாலத்தை இவர்கள் கடந்து விட்டால்!

மறு கரையிலே நின்று ஒரு விநாடி யோசித்தான். அடுத்த விநாடி வேகத்தோடு அந்தப் பனைமரத் துண்டை ஒரு தரம் அப்படியும் இப்படியும் ஆற்றல் மிகுந்த கைகளினால் அசைத்தான். மரத் துண்டை வேகமாக இழுத்து மறு கரைப் பக்கமாக ஓங்கித் தள்ளினான். பனைத் துண்டம் தண்ணீரிலே விழுந்து தொங்கியது. தங்கவேலன் அடுத்த கணம் காற்றாய்ப் பறந்து அந்த மரப்பாலத்துக்கு அப்பால் இருந்த தோப்புக்குள்ளே மறைந்து விட்டான்.

'போலீஸ்காரர்களுக்கு எப்படித் தெரியும்! இப்படி ஒரு பனைத் துண்டு இங்கே கிடந்த விவரம் அவர்களுக்குத் தெரியுமா! அப்படியே தெரிந்தாலும் இதற்குப் பக்கத்திலேதான் நாம் இருக்கிறோம் என்று எப்படி அவர்களால் யூகிக்க முடியும்!' — இவ்வாறு எண்ணினான் தங்கவேலன்.

## 4

வேகமாக ஓடிவந்த போலீஸ் படை காட்டாற்றின் கரையிலே அந்தக் காட்சியைக் கண்டு திகைப்படைந்து நின்றது!

தண்ணீர் சுழித்துக் கொண்டு ஓடிய ஆற்றின் கரையில் ஒரு குறிப்பிட்ட இடத்திலே நாய் ஒன்று நின்று மண்ணை மோப்பம் பிடிப்பதும், தண்ணீரைப் பார்த்துக் குரைப்பதுமாக நிலை கொள்ளாமல் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. பாவம், தண்ணீரின் ஆழமும் வேகமும் அந்த நாயை அச்சமுறுத்தின. எங்கெங்கோ சுற்றித் திரிந்து யஜமானனுடைய கால் தடத்தை மோப்பம் பிடித்து மரப்பாலம் வரை வந்து விட்ட நாய், அதற்கு மேல் செல்ல முடியாமல் கண்ணீர் வடித்தது!

'இதுதான் தங்கவேலனுடைய நாய். சந்தேகமில்லை' என்றார் ஒரு போலீஸ் ஜவான். 'நாயைச் சுடு' என்றார் ஒரு ஹெட் கான்ஸ்டபிள்.

“சுடாதே. சுட்டு விடாதே!” என்றார் கடுமையான ஆங்கிலத்தில், போலீஸ் துரை. நாயின் உபயோகம் அவருக்கு அல்லவா தெரியும்! மேலே நடக்க வேண்டிய விஷயங்களுக்கு 'டக்டக்' என்று உத்தரவு போட்டார் துரை.

அவ்வளவுதான். மூடி விழிக்கும் நேரத்தில் போலீஸ் படை ஒரு பனைமரத்தை வெட்டிக் கொண்டு வந்து போட்டு, அந்தக் காட்டாற்றிலே புதிய மரப்பாலம் ஒன்றை அமைத்து விட்டது.

தங்கவேலனைப் பிடிக்கும் முயற்சியில் எந்த நாய் தங்களுக்குப் பெரிய இடையூறாக இருந்தது என்று போலீஸ்காரர்கள் நினைத்தார்களோ, அதே நாய் இப்பொழுது அவர்களுக்குப் பெருந்துணை செய்தது! எந்த நாயின் அன்பு இதுவரை தங்கவேலனுக்குப் பக்க பலமாக இருந்ததோ, அதே நாயின் அதே மாறாத பழைய அன்பு இப்பொழுது தங்கவேலனுக்குப் பெரும் பகையாக முடிந்தது! பாவம், அந்த நாய்க்கு இது தெரியுமா! மனிதனாகப் பிறந்திருந்தால் அல்லவா, எந்தச் சமயத்தில் யாரிடத்தில் எப்படி அன்பு செலுத்தினால் பயன் உண்டாகும் என்று அதற்குத் தெரியும்! அது,

பாவம், நாயாக அல்லவா பிறந்திருந்தது! யஜமான விசுவாசத்தைப் பயன் கருதிக் காட்டுகிற பழக்கம் அதற்கு இல்லையே! யஜமானனைக் கண்டு பிடித்து விடவேண்டும் என்ற ஒரே எண்ணந்தான் அதற்கு! அதன்படியே, மண்ணை மோந்து பார்த்து மோந்து பார்த்துக் கண்டு பிடித்து விட்டது யஜமானனை! ஆனால் தனியாக இல்லை. அத்தனை பெரிய போலீஸ் படை அதன் பின்னால் தொடர்ந்து வந்தது!

## 5

**த**ங்கவேலன் பிடிபட்டான். காணாமற் போன யஜமானனைக் கண்டு பிடித்த உற்சாகத்தில் அவனுடைய இருவடிகளை மோந்து மோந்து முத்தம் இட்ட வண்ணம் வாலைக் குழைத்தது அந்த நன்றியுள்ள நாய்.

காணாமல் போன திருடனைக் கண்டு பிடித்து விட்டதில் உற்சாகம் மேலிட்டவராய் அவனுடைய கையிலே விலங்கை மாட்டினார்கள் அந்த ராஜ விசுவாசமுள்ள அதிகாரிகள்.

வேட்டை நாய் துணுக்குற்றது. இதுவரை வாலைக் குழைத்த நாய், இப்பொழுது ஏறிட்டுப் பார்த்தது, யஜமானனுக்கு என்ன நேர்ந்தது என்று! மறுகணம், அவன் கால்களிலே சுற்றி வளைத்துப் படுத்துக் கொண்டது.

"என்ன நிற்கிறாய்! மேலே நட!" என்றார் ஹெட்கான்ஸ்டபிள், தங்கவேலனைப் பார்த்து.

"நன்றியுள்ள நாய் வழி மறிக்கிறதே!" என்றான் தங்கவேலன், உருக்கமாக.

"போடுடா அவன் தலையிலே ஒன்று!"

"அதற்கு அவசியம் இல்லை. நானே வருகிறேன்!" என்றான் தங்கவேலன். அவனை வழிமறித்துக் கொண்டு நின்ற நாய் குரைத்தது. குரைத்துக் கொண்டே மறுபடியும் அவனை வழிமறித்தது.

"எடுடா கல்லை" என்றார் ஏட்டையா!

"என் கண் முன்னால் அதைச் சித்திரவதை செய்யாதீர்கள்!" என்றான் தங்கவேலன். அவனுக்குக் குரல் கம்மிற்று.

"அன்பு செலுத்துவதற்கும், நன்றி விசுவாசத்தைக் காண்பிப்பதற்கும் சமய சந்தர்ப்பங்களை அலசி யோசிக்கத் தெரியாது இந்தப் பிராணிக்கு. பொதுவாகக் காதல்தான் திருடனைக் காண்பித்துக் கொடுக்கும் என்று கதைகள் கேட்டிருக்கிறேன்; என் வரையில் என்னுடைய காதலன், காதலி எல்லாம் இதுதான். அதன் காதல்தான் என்னையும் காட்டிக் கொடுத்து விட்டது. ஆனாலும் சொல்கிறேன். இத்தனை நன்றி இதற்கு என்னத்திற்கு! மனிதர்களால் இதைத் தாங்க முடியுமா! முடியாது. இத்தனை நன்றியுள்ள பிராணியை விட்டு விட்டு நான் மட்டும் தப்பி ஓட நினைத்தேன் அல்லவா அந்த நினைப்புக்குத் தெய்வம் என்னைத் தண்டித்தது. நாய் என்ன செய்யும்! பாவம், அதை வதைக்காதீர்கள்!"

இப்படிச் சொல்லிய வண்ணம் போலீஸ்காரர்களைக் கும்பிட்டான் தங்கவேலன்.

"நாயைச் சுடு" என்றார் துரை கம்பீரமாக நின்று கொண்டே! இனி அதனுடைய உதவி அவருக்குத் தேவையில்லை.

"சித்திரவதை செய்வதை விட எத்தனையோ மேல்! தயவுசெய்து அதைச் சுட்டு விடுங்கள்!" என்றான் தங்கவேலன்.

குண்டு வெடித்தது!

## விதியின் கொடுமை!

● புகைப்படக் கலை மிக அருமையான கலை. அந்தக் கலையிலே தேர்ச்சியடைதல் எளிய காரியமன்று. இயற்கையோடு பிறந்த கலை உணர்ச்சி வேண்டும். இடைவிடாத உழைப்பும் பயிற்சியும் வேண்டும். இப்படி அரிதில் பெற்ற வித்தை நன்கு சோபிப்பதற்கு நல்ல சந்தர்ப்பங்கள் கிடைக்க வேண்டும். இந்த அம்சங்கள் எல்லாம் ஒருங்கே பெற்றவர் போட்டோக் கலைஞர் திரு எம். டி. கணேஷ் அவர்கள். லட்சக்கணக்கான



மக்கள் கூடியிருக்கும் பெருங் கூட்டத்திலும், எந்தவிதமான வசதியும் இல்லாத இக்கட்டான இடங்களிலும் மிகத் திறமையாகப் படம் எடுக்கும் ஆற்றல் பெற்றவர். சென்ற பல ஆண்டுகளாகக் 'கல்கி' பத்திரிகையின் புகைப்பட நிருபராக இருந்து சிறந்த முறையில் தொண்டாற்றி வந்தவர். பெப்ருவரி மாதம் 20உ காலை ஆறரை மணிக்குக் காலமாகி விட்டார் என்பதை மிகுந்த துயரத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். எப்பொழுதும் மலர்ந்த முகத்துடன் உற்சாகத்தோடு தொண்டாற்றி வந்த திரு கணேசன் தம்முடைய நாற்பத்தைந்தாவது வயதில் திடீரென்று ஏற்பட்ட வயிற்று வலி காரணமாகக் காலமாகி விட்டார். அவர் இல்லத்துக்கு 'கல்கி' காரியாலய மானேஜிங் டைரக்டர் திரு சதாசிவம் அவர்களும், கல்கி ஆசிரியர் திரு சோமு அவர்களும், உதவி ஆசிரியர்களும், 'கல்கி' காரியாலயச் சிப்பந்திகளும் சென்று தங்கள் மரியாதையைச் செலுத்தினர். அகால மரணமடைந்த திரு கணேசனின் பிரிவால் வாடும் அவர் இளம் மனைவிக்கும், சின்னஞ் சிறு குழந்தைகள் நால்வருக்கும், அவர் தமையனாருக்கும் யார்தான் ஆறுதல் கூற முடியும்! அவர்கள் துயரத்தை எப்படித் துடைக்க முடியும்! எந்த மொழியில் அவர்களுக்குத் தேறுதல் கூற முடியும்! விதியின் கொடுமையை யாராலும் எதிர்க்க முடியாது என்பதைத்தான் அவர்களுக்கு எடுத்துக் கூற முடியும். திரு கணேசனின் பிரிவைத் தாங்கும் சக்தியை அவர் குடும்பத்தினருக்கு அருளுமாறு இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

# பிரும்மச்சாரியின் குடித்தனம்!



குடும்பம் நடத்தப் போதிய வருமானம் இல்லை என்று பிரம்மச்சாரியாகவே இருக்கத் தீர்மானித்தேன்.



இதையறிந்த என் பெற்றோர்கள், 'உனக்குத் தான் குடும்பம் இல்லையே, எனக்குப் பணம் கொடேன்' என்று கேட்கிறார்கள்!





'உனக்குத்தான் வீட்டில் மனைவி மக்கள் யாரும் இல்லையே. நாங்கள் கொஞ்ச நாள் தங்கிவிட்டுப் போகிறோம்' என்று ஓயாமல் விருந்தாளிகளும் நண்பர்களும் வருகிறார்கள்.



'உனக்குக் குழந்தையா, குட்டியா? என் பெண்ணின் படிப்புச் செலவை நீ ஏற்றுக் கொள்ளேன்!' என்கிறாள் என் அத்தை!



இதையெல்லாம் பார்த்தவுடன் 'அடாடா! அன்றைக்கே கல்யாணம் செய்து கொள்ளாமல் போய் விட்டோமே!' என்று தோன்றுகிறது!

# ஈரான் மன்னருக்கு வரவேற்பு

இப்போது பாரத நாட்டுக்கு வந்துள்ள ஷாவைப் பற்றி நினைக்கும்போது ஈரான் நாட்டுக்கும் பாரத நாட்டுக்கும் நீண்ட நெடுங் காலமாக இருந்து வந்த தொடர்புகளை எண்ணிப் பெருமிதமும் பூரிப்பும் அடையாமலிருக்க முடியாது. தமிழ் மன்னர்கள் அந்நாட்களில் கடல்துறை வர்த்தகமும், தூதுவர்களின் தொடர்பும் பாரசீக நாட்டுடன் செய்து கொண்டார்கள் என்பதை நினைத்தால் உள்ளத்தில் யாருக்குத்தான் மகிழ்ச்சி பொங்காது! பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில்தான் இத் தொடர்பு தடைப்பட்டது. மீண்டும் அத்தகைய தொடர்புகள் ஏற்பட வழியுண்டாக்கித் தருகிறது, இன்றைய ஈரான் மன்னரின் பாரத விஜயம்.

இன்றைய ஈரான் மன்னர் மூகம்மது ரஜா பஹெலவி ஷாவுக்கு முப்பத்தாறு வயதுதான் ஆகிறது. மேல்நாட்டுக் கல்வியும் முற்போக்கான கொள்கைகளையும் உடையவர் ஷா. ஈரான் நாட்டில்தான் எண்ணெய்க் கிணறுகள் இருக்கின்றன. இன்றைய இயந்திர யுகத்துக்கு மிக அத்தியாவசியமான 'பெட்ரோல்' கிடைக்கும் ஊற்றுகள் ஈரானில்தான் இருக்கின்றன. இந்த எண்ணெய்க் கிணறுகளின்மீது ருஷ்யா, பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி ஆகிய எல்லா நாடுகளுக்குமே ஒரு கண் எப்போதுமே உண்டு. சென்ற யுத்தத்தின்போது ஈரான், ருஷ்யா, பிரிட்டன் முதலிய நாடுகளின் ஆதிக்கத்தில்தான் இருந்தது.

1946-ல்தான் ஈரான் சுதந்திரம் பெற்றது. ஆயினும் ஈரானின் எண்ணெய்க் கிணறுகள் பிரிட்டன், அமெரிக்காவைச் சேர்ந்த முதலாளிகளிடமே இருந்து வந்தன. 1951ல் ஷாவின் பிரதமர் மூஸாதிக் மக்களிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். இவர் எண்ணெய்க் கிணறுகளிலிருந்து அன்னியர்களை அகற்றிவிட்டுத் தேசிய மயமாக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அப்படியே வெகு எளிதில் பிரிட்டிஷாரை அனுப்பி விட்டார். தேசிய மயமாக்கப்பட்ட கிணறுகள் சரியாக வேலை செய்யவில்லை. ஊழல் மலிந்தது. நிர்வாகம் கெட்டுப் போயிற்று. தேசத்தில் விலைவாசிகள் ஏறிவிட்டன. டாக்டர் மூஸாதிக்கைப் பதவியிலிருந்து அகற்றினாலொழிய வேறு வழியில்லை என்ற நிலை ஏற்பட்டது. ஷா அவரை நீக்கினார். அவருக்குப் பதிலாக வந்தவரும் அதிகநாள் நீடிக்கவில்லை. ஏனெனில் பொது மக்கள் டாக்டர் மூஸாதிக்தான் வேண்டும் என்று கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். ஷா பொது மக்களின் விருப்பத்துக்கு இணங்கி அவரை ஏற்றார். மீண்டும் ஷாவுக்கும் டாக்டர் மூஸாதிக்குக்கும் வேற்றுமைகள் வளரத் தொடங்கின. மஜ்லிஸ் என்ற மக்கள் சபையின் செல்வாக்குப் பெற்ற டாக்டர் மூஸாதிக்கை நீக்கி விடுவது அவ்வளவு சுலபமல்ல என்று தெரிந்து கொண்டார். மூஸாதிக்கைப் பதவியிலிருந்து நீக்கிச் சிறைப்படுத்தி விட்டு அன்றே யாருக்கும் தெரியாமல் ஷாவும் அவர் மனைவியும் இத்தாலி தேசத்துக்கு உடுத்திய உடையுடன் பறந்து சென்று விட்டனர். அதாவது தாமே தேசத்தை விட்டு அஞ்ஞாதவாசம் செய்யத் துணிந்து விட்டார்.

இப்பொழுதுதான் ஈரான் நாட்டு மக்களுக்குத் தங்கள் நலனை உண்மையில் கோருபவர் யார் என்பது நன்றாகப் பிடிபடலாயிற்று. தங்கள் பிரதமரை விட மன்னரே தங்கள் நலன்களில் அக்கறையும் சிரத்தையும் கொண்டவர் என்பது அவர்களுக்கு மனத்தில் தெளிவாகத் தெரியலாயிற்று. உடனே அவர்கள் தங்கள் மன்னரைத் திரும்பிவந்து ராஜ்யப் பொறுப்பு ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினர். தம் தேசத்தை விட்டு வெளியேறிய நான்காவது நாளே தமது நாட்டுக்குத் திரும்பி வந்து அரச பதவி ஏற்றார் ஷா. அன்றிலிருந்து ஷாவின் செல்வாக்குப் பெருகி வருகிறது.

இவ்வளவுக்கும் காரணம் ஷா ஈரான் நாட்டு விவசாயிகளின் பேரன்பைப் பெற்று விட்டது தான். ஆம், தம் சொந்த நிலங்கள் ஏராளமானவற்றை விவசாயிகளுக்குத் தானமாகவே வழங்கியிருக்கிறார். எண்ணெய்க் கிணறுகள் விஷயத்தில் மீண்டும் பிரிட்டன், அமெரிக்கா முதலாளிகளிடம் ஈரான் தேச நலனுக்குப் பயன்படும் வகையில் ஒப்பந்தம் செய்து கொண்டு அத்தொழிற்சாலைகளை நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்.



ஈரான் மன்னர் ஷாவும் ராணி ஸொராயாவும்

ஷாவின் முதல் மனைவி மாஜி எகிப்து மன்னர் பரூக்கின் சகோதரி. அவரை விவாக ரத்து செய்து விட்டு, சாதாரண ஒரு பிரஜையை மணந்து அவரைத் தமது ராணியாக்கிக் கொண்டார். அதிலிருந்து அவர் செல்வாக்கு மேலும் வளரத் தொடங்கியது.

ஈரானில் எண்பது சத விகிதத்துக்கு மேல் படிப்பு வாசனை யற்றவர்கள். எனவே ஷாவும் ராணியும் தினம் இரண்டு மணி நேரம் டெஹ்ரானிலுள்ள பள்ளிக்கூடங்களுக்குச் சென்று குழந்தைகளுக்குக் கல்வி புகட்டி வருகிறார்கள்.

ஷாவுக்கு விமானம் ஓட்டுவதில் விசேஷ ஆர்வம் உண்டு. தமது விமானத்தைத் தாமே ஓட்டுபவர். வேகமாக விமானம் ஓட்டுவதிலும், வேகமாகக் கார்களில் சவாரி செய்வதிலும், வேகமாகத் தமது நாட்டு மக்கள் முன்னேறுவதிலும் மிகுந்த ஆர்வமுள்ளவர்.






அவனைப் பொறுத்த மட்டிலும்
கவலையே வேண்டாம்.
ஏனெனில் அவன்

# லாக்டோஜனால்

வளருகிறான்.

LC/G/16

தாய்ப்பால் போதிய அளவில் இல்லாதபொழுது
லாக்டோஜனை நம்புங்கள்.

இலவசமான புத்தகத்திற்கு கூப்பனை பூர்த்தி செய்து நெஸில்ஸ் பிராடக்ஸ் (இந்தியா) லிமிடெட், 30, முதல் கிடங்குத் தெரு, மதராஸ் என்ற விலாசத்திற்கனுப்பவும்.



பெயர்........................................

விலாசம்......................................

..................................................



# வட இந்திய யாத்திரை 31

தமிழ் மக்களே! கேட்டீர்களா உங்களுக்கு வந்திருக்கும் மகிமையை! அறிந்து கொண்டீர்களா உங்களுக்குக் கிடைத்திருக்கும் பெருமையை! தெரிந்து கொண்டீர்களா உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் கிராக்கியை! ஜம்மு-காஷ்மீர் ராணுவ முகாம்களிலே எங்கே பார்த்தாலும் தமிழர்களின் மகிமை தான் ஒரே முழக்கமா யிருக்கிறது.

"தமிழர்களை எங்கள் பகுதிக்கு அனுப்பி வையுங்கள்!" "தமிழ் வீரர்களை எங்கள் பகுதிகளுக்கு உடனே அனுப்பி வையுங்கள்!" என்று ஒரே கூக்குரலா யிருக்கிறது.

இதை ஏதோ நான் உபசாரத்துக்காக, தமிழ் மக்களை உயர்வு படுத்துவதற்காகச் சொல்லுவதாக நேயர்கள் நினைத்துவிட வேண்டாம். ஜம்மு — காஷ்மீர் ராணுவ முகாம்களிலே கண்ணால் கண்டு, காதால் கேட்டு, தீர விசாரித்த மறுக்க முடியாத உண்மையைத்தான் சொல்லுகிறேன்.

# ராணுவ

மணியன் —

நம் செந்தமிழ் நாட்டின் பெருமையை இமயத்திலே நிலைநாட்டி இருக்கிறார்கள் நம்முடைய தமிழ் நாட்டு வீரர்கள்.

ஜம்மு - காஷ்மீரில் நடைபெற்ற யுத்தத்தின் போது காஷ்மீரை ஆக்கிரமித்திருந்த பாகிஸ்தான் படை வீரர்களை விரட்டுவதற்குச் சைன்யங்கள் சென்றதல்லவா! அந்தச் சைன்யங்களுக்கு முன்னால் சென்று, காடு மேடுகளைச் சீர்திருத்தி, பாதைகளைச் செப்பனிட்டு இதர வீரர்களுக்கு வழிவகுத்துக் கொடுத்தவர்கள் தமிழ் வீரர்கள்தான். எங்கெல்லாம் பாதைகள் ரொம்பக் கரடுமுரடாகவும், முன்னேற முடியாமலும் இருந்தனவோ, அங்கே யெல்லாம் "தமிழ் வீரர்களை அனுப்பி வையுங்கள்!" என்று கேட்டார்களாம்.

இதுபோன்று போர்முனையின் முன்னணி வீரர்களாகத் திகழ்வதிலிருந்து, விமானங்கள் ஓட்டுதல், டாங்கிகள் ஓட்டுதல் முதலிய பல நவீன யுத்த வாகனங்களை அற்புதமாக இயக்கி அனாயாசமாக யுத்த முனையில் வெற்றி ஏற்படுத்திக் கொடுத்ததில் பெரும் பங்கு தமிழ் நாட்டு வீரர்களையே சாரும்.

நூற்றிருபது டிகிரி வெய்யிலின் கொடுமையிலிருந்து முப்பது டிகிரி குளிர் வரையில், பயங்கரமான மலைப்பாறையிலிருந்து, உறை பனிகள் உறைந்து கிடக்கும் இடங்கள் வரையில், மலை அடிவாரத்தில் இருந்து பதினோராயிரம், பன்னிரண்டாயிரம் அடி உயரம் உள்ள மலை உச்சி வரையில் தமிழ் வீரர்கள் பிரமாதமான காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் செய்திருக்கும் காரியங்களையும், செய்து வரும் காரியங்களையும் குறித்துத் தமிழ் மக்கள் ரொம்ப ரொம்பப் பெருமையடைய இடம் இருக்கிறது.

மேகமண்டலம் வரை, சந்திர மண்டலம் வரை, நட்சத்திர மண்டலம் வரை தமிழ் நாட்டின் பெருமையைத் தமிழ்நாட்டு வீரர்கள் உயர்த்தி யிருக்கும்போது அதைப் பற்றிப் பெருமையடையாமல் இருக்க முடியுமா!

** ** **

**ரா**ணுவ முகாமுக்குள் சென்றதும் மேஜர் ஜெனரல் எம். வி. பால் பத்திரிகையாளர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றார். உடனே நீண்ட நாள் பழகிய நண்பர்களுடன் அளவளாவுவது போல் எங்களுடன் பல விஷயங்களைப் பற்றியெல்லாம் பேச ஆரம்பித்து விட்டார்.

"ஜம்மு - காஷ்மீர் பகுதிகளில், நம்முடைய இந்திய சேனைகள் எங்கெல்லாம் இருக்கின்றன என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா!" என்று வினயமாகக் கேட்டார்.

"தெரிந்து கொள்ளத்தானே வந்திருக்கிறோம்!" என்றோம்.

"வாருங்கள். அதை யெல்லாம் காண்பிக்கிறேன்" என்று கூறி விட்டு அருகிலிருந்த அறைக்குள் எங்களை அழைத்துச் சென்றார்.

இமயமலை மீது பல இடங்களில் இருக்கும் நமது சேனைகளைப் பார்ப்பதற்குச் சின்னஞ்சிறு அறைக்குள் அழைத்துச் செல்கிறாரே என்று வியந்து கொண்டிருக்கும்போதே "இதுதான் ஜம்மு-காஷ்மீர் பகுதி" என்றார்.

அங்கு ஜம்மு — காஷ்மீர் சமஸ்தானத்தை மட்டும் அப்படியே களி மண்ணால் செய்து வைத்திருக்கிறார்கள். அக் களிமண் பொம்மை ஆகாயத்திலிருந்து பார்த்தால் ஜம்மு—காஷ்மீரின் பூகோள அமைப்பு எப்படி இருக்குமோ அதே போல இருந்தது. மலையும், ஆறும், காடும், கிராமமும், நகரமும் எல்லாம் அந்தக் களிமண் ஜம்மு—காஷ்மீர் பொம்மையிலேயே தெளிவாக அமைந்திருக்கிறது.

இந்த ஜம்மு - காஷ்மீர் பூகோள அமைப்புப் பொம்மையை எதிரிலேயே வைத்துக் கொண்டு நமது ராணுவம் எங்கெல்லாம் இருக்கிறது என்பதை விளக்கினார்.

காஷ்மீர் இரண்டு எல்லைகளை உடையது. ஒன்று பழைய எல்லை. மற்றது புதிய எல்லை. 1949-ல் யுத்த நிறுத்த ஒப்பந்தம் ஏற்பட்டது அல்லவா! அப்பொழுது நிர்ணயித்த சமாதான எல்லைக் கோடுதான் புதிய எல்லை. இதற்கு 'சீஸ் பயர் லைன்' என்று ஆங்கிலத்தில் பெயர்.

பத்தான்கோட்டிலிருந்து உதம்பூர் வரையில் எல்லைக் கோட்டில் வித்தியாசம் கிடையாது. இரண்டு எல்லைக் கோடுகளும் ஒன்று தான். உதம்பூருக்குப் பிறகு பாகிஸ்தான் படைகள் ஜம்மு காஷ்மீர் பகுதிக்குள் அக்கிரமமாக நுழைய முடியவில்லை. உதம்பூருக்கு அந்தப் பக்கத்தில் பாகிஸ்தான் சோல்ஜர்கள் சில பிரதேசங்களை ஆக்ரமித்திருக்கிறார்கள்.

ஜம்மு காஷ்மீர் நிலப்பரப்பில் மூன்றில் ஒரு பங்கும், ஜனத்தொகையில் காலில் ஒரு பங்கும் இன்று பாகிஸ்தான் வசம் இருக்கிறது. ஜம்முவிலிருந்து திபெத் வரை சுமார் எண்ணூறு மைல் நீளம் சமாதான ஒப்பந்த எல்லைக்கோடு நீண்டு கிடக்கிறது. இந்த எண்ணூறு மைல் நீளத்திலும் இன்றைய தினம் நமது இந்திய ராணுவம் இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் நின்று காவல் காத்து வருகின்றது.



இந்த எண்ணூறு மைல்களும் மலைப் பிரதேசம் தான். இமயமலைப் பிரதேசம். ஆகையால் கற்பனை செய்து காண முடியாத மலையின் உயரங்களிலும், படுபாதாளத்திலும் நமது சைன்யங்கள் வெய்யிலிலும், பனியிலும் நின்று காவல் காத்து வருகின்றன.

சமாதான ஒப்பந்தக் கோட்டிலிருந்து ஐந்நூறு அடி உள் பக்கம் தள்ளி நமது சைன்யங்கள் இருக்கின்றன. அதே போல அந்தப் பகுதியில் பாகிஸ்தான் சைன்யங்கள் இருக்கின்றன. அவ்வாறு நின்று காவல் காக்கும் சேனைக்கு 'பிக்கட்' என்று பெயர். ஒரு பிக்கட்டுக்கும் இன்னொரு பிக்கட்டுக்கும் உள்ள தூரம் சூழ்நிலைக்கு ஏற்ப ஐந்து மைல், பத்து மைல் என்று தள்ளித் தள்ளி இருக்கிறது. இந்த பிக்கட்டுகள் எதிரிகள் சமாதான ஒப்பந்த எல்லைக் கோட்டைத் தாண்டி இந்திய எல்லைக்குள் நுழையாமலும், அந்தப் பகுதிகளில் எதிரிகள் கலகங்கள் ஏற்படுத்தாமலும் பார்த்துக் கொண்டிருக்கின்றன.

பிக்கட்டுகளுக்குப் பின்னால் ராணுவ முகாம்கள் இருக்கின்றன. உணவுப் பொருள்கள் வழங்குவதற்கு வேண்டிய போக்கு வரவு சாதனங்களும் இருக்கின்றன. பலவிதமான யுத்த தளவாடச் சாமான்கள் இருக்கின்றன. கம்பியில்லாத் தந்தி மூலம் செய்திகளை அனுப்பும் நிலையங்கள் இருக்கின்றன. வீரர்களின் உணவு விடுதி, விளையாடும் இடம், பொழுது போக்கு இடம் என்று பல பகுதிகள் ஆங்காங்கு பரவலாக இருக்கின்றன.

" இந்த இடங்களில் எங்கு வேணுமானாலும் போகலாம். யாரை வேணுமானாலும் எதை வேணுமானாலும் கேட்கலாம் " என்று பத்திரிகையாளரிடம் கூறினார் மேஜர் ஜெனரல்.

இது இந்திய சைன்யமல்லவா ! இந்திய மக்களுக்குத்தான் ஒளிவு மறைவு ஒன்றும் இல்லையே! ஆனாலும் இந்த இடங்களில் பிறர் தெரிந்து கொள்ளக்கூடாத சில ரகசியங்களும் இருக்கின்றன. இந்த ரகசியங்களை எல்லாம்கூட பத்திரிகையாளர்கள் பார்ப்பதற்கு அனுமதி அளித்தார்கள். எல்லா விஷயங்களையும் பார்த்தாலும் நமது தேச நலனை உத்தேசித்து நேயர்களுக்கு ரகசியம் அல்லாத சில விஷயங்களைத்தான் சொல்லப் போகிறேன்.

இந்தவிவரங்களை எல்லாம் மேஜர் ஜெனரல் ஒளிவு மறைவு இன்றிச் சொன்னார். இதைக் கேட்டதும் எங்களுக்கே ஆச்சரியமாகத்தான் இருந்தது. ராணுவத்தினர்களைப் பற்றி இது வரையில் கொண்டிருந்த அபிப்பிராயங்களை எல்லாம் மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்.

## தமிழ் நாட்டு வீரர்கள்

வாருங்கள், ராணுவ முகாம்களைப் பார்க்கலாம். ராணுவ முகாமிலேயே ரஸமான பகுதி விமானம் சுடும் பீரங்கிகள் இருக்கும் பகுதி தான். இந்தப் பகுதியில் வேலை செய்வதற்கு அபாரமான மூளையும், சமயோஜிதமான யுக்தியும் வேண்டும். ஆகையால் அந்தப் பகுதியையே முதலில் பார்ப்போம். அதோ தெரிகிறதே அதுதான் ராணுவக் கூடாரம்.

பூமியில் நாலு அடி, ஐந்து அடி பள்ளம் தோண்டி அந்தப் பள்ளத்துக்கு மேலே கூடாரம் போட்டிருக்கிறார்கள்.

" ஏன் இப்படிக் குழி தோண்டிக் கொண்டு அதன் மேல் கூடாரம் அடித்திருக்கிறீர்கள் !"

" இது கோடைக் காலத்தில் குளிர்ச்சியாகவும், குளிர் காலத்தில் கதகதப்பாகவும் இருக்கும். அதற்காகவே இப்படிப் பள்ளம் தோண்டி அதன் மீது கூடாரம் அடித்திருக்கிறோம்."

" கூடாரத்தைச் சுற்றிலும் ஒரு அடி அகலத்துக்கு, மூன்றடி ஆழத்துக்கு அகழ் போல் வெட்டியிருக்கிறீர்களே, அது எதற்காக !"

" அதுவா ! பாம்புப் பள்ளம் !"

" அப்படி யென்றால் !"

" இந்தப் பக்கத்தில் கொடிய விஷப் பாம்புகள் இருக்கின்றன. அது கடிக்கவே வேண்டாம். மூச்சு விட்டாலே போதும். ஆள் அரோகராதான்! அம்மாதிரி கொடிய விஷப் பாம்புகள் இந்தப் பக்கங்களில் உலாவிக் கொண்டே இருக்கின்றன. பாம்புகள் தரையோடு தரையாக ஊர்ந்துதான் செல்லும். அப்படி ஊர்ந்து வரும்போது இந்தப் பள்ளத்திலும் ஊர்ந்த வண்ணம்தான் இறங்கி ஏறும். பள்ளத்தின் அடிப்பாகத்தில் அதன் உடல் நன்றாக வளைவதால் அதன் முதுகெலும்பு முறிந்து விடுகிறது. அதனால் பாம்பு மேலே நகர முடியாமல் பள்ளத்திலே கிடந்து சாக வேண்டியதுதான்."

"ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது, நீங்கள் பாம்பைக் கொல்லும் விதம்."

"பாம்புகள் தானே எங்கள் முதல் எதிரிகள்!"

அடுத்த கூடாரங்களுக்குச் செல்வோம். கூடாரங்கள் எல்லாம் ரொம்பவும் சுத்தமாக இருக்கின்றன. இந்தக் கூடாரங்களையும், இங்குள்ளவர்களையும் பார்க்கும்போது இமய மலையில் இருக்கிறோம் என்பதே மறந்து விடுகிறது! காரணம், அங்கிருப்பவர்கள் பெரும் பாலோர் தென் இந்தியர்கள். அதிலும் தமிழர்களும், மலையாளிகளும்தான் ரொம்ப அதிகமாக இருக்கிறார்கள்.

வட இந்திய யாத்திரையில் சென்ற சில வாரங்களுக்கு மேலாக இந்தியும், ஆங்கிலமும் தான் காதில் விழுந்து கொண்டிருந்தன. இந்த ராணுவ முகாம்களில் கலகலவென்ற தமிழ்ச் சிரிப்பைக் கேட்டபோது காதில் தேன் வந்து பாய்ந்தது போலிருந்தது.

" கல்கியில் இருந்துதானே வருகிறீர்கள் ! பரதன்தானே நீங்கள்!" என்ற குரல் கேட்டு வியப்போடு திரும்பினேன்.

ஒரு தமிழ் வீரர் மலர்ந்த முகத்துடன் கை கூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தார்.

" உங்களுக்கு எந்த ஊர் !"

" மதுரை."

" தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் இன்னும் இருக்கிறார்களோ !"

" இந்தப் பகுதியில் ஏராளமாக இருக்கிறார்கள். இதோ கூப்பிடுகிறேன்."

ஒரு சில நிமிஷ நேரத்தில் ஏராளமான தமிழ் வீரர்கள் சூழ்ந்து கொண்டார்கள். தங்கள் சொந்தப் பத்திரிகையான 'கல்கி'ப் பத்திரிகையின் பிரதிநிதியை மனமுவந்து வரவேற்றார்கள். தங்கள் உணவு விடுதிகளுக்கு வற்புறுத்தி அழைத்துச் சென்றார்கள்.

வட இந்தியப் பிரயாணத்தில் சப்பாத்தியும் ரொட்டியும் சாப்பிட்டுச் சாப்பிட்டு அலுத்துப் போயிருந்த எனக்கு உணவு விடுதிக்குள்

# தக்ஷிண ரெயில்வே

## அறிவிப்பு

1-5-56 முதல் 30-4-57 வரை உள்ள 12 மாதங்களில் ரெயில்வேக்குத் தேவையான யூனிபாரம் உடைகளை வெட்டித் தைக்கவும் மற்றும் குல்லாய்கள், ஹாட்கள், ஸ்டாகிங்ஸ் முதலியவைகள் சப்ளை செய்ய சீலிட்ட டெண்டர்கள், தக்ஷிண ரெயில்வே சீப் கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸில் (பெரம்பூர், மதராஸ்-23) 5-3-56 பிற்பகல் 3 மணி வரை ஏற்றுக்கொண்டு மறு நாள் (6-3-56) காலை 11 மணிக்குப் பரிசீலிக்கப்படும்.

டெண்டர்களை, அதற்கான பாரங்களில்தான் பூர்த்தி செய்ய வேண்டும். டெண்டர் பாரம் பெற விரும்புவோர் முழுப் பெயர், விலாசம் முதலியவைகளைக் குறித்து பாரம் ஒன்றுக்கு ரூ. 10/- வீதம் ரொக்கமாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ செலுத்தி கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸிலிருந்து (தக்ஷிண ரெயில்வே, பெரம்பூர், மதராஸ்-23) டெண்டர் பாரங்களைப் பெறலாம். (இப்பணம் திருப்பித் தரப்படமாட்டாது) போஸ்டல் ஆர்டர் மூலமும் மற்ற எவ்வகையிலும் அனுப்பும் தொகை அங்கீகரிக்க இயலாது. வி. பி. பி. மூலம் டெண்டர் பாரங்கள் அனுப்புவதற்கில்லை. டெண்டர் பாரங்கள் மாற்றத்தக்கதல்ல.

டெண்டர் பாரங்கள், வாராந்திர வேலை நாட்களில் காலை 10-30 முதல் மாலை 3 மணி வரையிலும், சனிக்கிழமைகளில் காலை 10-30 முதல் பகல் 12 மணி வரை கொடுக்கப்படும். 2-3-56 பிற்பகல் 2 மணிக்குப் பிறகு கொடுக்கப்பட மாட்டாது.

2-3-56 பிற்பகல் 3 மணிக்குள்ளாக, மதராஸ் பார்க் டவுனில் உள்ள தக்ஷிண ரெயில்வே, சீப் காஷியர் வசம் டெண்டர் டெபாஸிட்டாக ரொக்கம் ரூ. 1000/-த்தைச் செலுத்தி அதன் ரசீதையும் டெண்டர் பாரத்துடன் அனுப்ப வேண்டும். தொகைக்கான ரசீது இல்லாத டெண்டர் பாரங்கள் கவனிக்க இயலாது. இத்தொகைக்கு வட்டி கிடையாது.

டெண்டர் பாரம் அனுப்புவோர், வருமான வரி க்ளியரன்ஸ் சர்டிபிகேட்டின் ஒரிஜனலை (Incometax Clearance Certificate) டெண்டர் பாரத்துடன் சேர்த்து அனுப்ப வேண்டும். அப்படிச் செய்யாவிடில் டெண்டர் பாரம் பரிசீலிக்கப்பட மாட்டாது.

**கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ்**

கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் காரியாலயம்
தக்ஷிண ரெயில்வே, பெரம்பூர், மதராஸ் - 23

சென்றவுடன் நாக்கில் ஜலம் ஊற ஆரம்பித்து விட்டது. ஜம்மென்று சாம்பார் மணமும், ரஸத்தின் வாசனையும் மூக்கைத் துளைத்தன. சாம்பார் சாதமும், ரஸம் சாதமும், தயிர் சாதமுமாக வயிறு நிறையத் திருப்தியுடன் சாப்பிட்டோம்.

சாப்பிடும் பொழுதே வீரர்கள் ஆயிரம் ஆயிரம் கேள்விகளைக் கேட்க ஆரம்பித்து விட்டார்கள். "கல்கியைப் படிக்கிறோம். வாரம் தவறாமல் படிக்கிறோம்" என்றார்கள். பின்னால் அவர்கள் வாசகசாலையில் 'கல்கி'ப் பத்திரிகை வரிசையாக வைக்கப் பட்டிருப்பதைப் பார்த்தேன். இந்தியாவின் வட எல்லையில் இமயத்தின் உச்சியிலே இருக்கும் தமிழ்நாட்டுவீரர்களுக்கு, தமிழர்களின் சொந்தப் பத்திரிகையான 'கல்கி'ப் பத்திரிகை அளவற்ற மகிழ்ச்சியை அளித்து வருகிறது என்பதைப் பார்க்கும்போது பெருமையாகத்தான் இருந்தது.



ஜம்மு - காஷ்மீர்ப் பகுதியைக் கண் அயராது காத்து வரும் ராணுவ அதிகாரிகளும், அங்கு விஜயம் செய்த அகில இந்தியப் பத்திரிகைப் பிரதிநிதிகளும்.

ராணுவ முகாம் வாசக சாலையில் பல ஆங்கிலப் பத்திரிகைகளுடன் 'கல்கி'யும், மலையாளப் பத்திரிகையுமான மாத்ரு பூமியும் இருந்தன. மாத்ருபூமியின் துணை ஆசிரியரான திரு என். வி. கிருஷ்ணன் வாரியரையும் மலையாள வீரர்கள் சூழ்ந்து கொண்டு உபசரித்தார்கள். மற்றப் பத்திரிகையாளர்களுக் கெல்லாம் இதைப் பார்க்கும்போது ஒரே ஆச்சரியமாக இருந்தது.

இவ்வாறு ஜம்மு – காஷ்மீர் பகுதிகளில் சென்ற இடங்களில் எல்லாம் தமிழ் வீரர்களும், மலையாள வீரர்களும் தங்கள் பத்திரிகைப் பிரதிநிதிகளிடம் காட்டிய பரிவும் வரவேற்பும் எழுத்திலே எழுத முடியாதவை.

## புகழ்பெற்ற உதம்பூர்

அடுத்தாற்போல் உதம்பூருக்குச் செல்வோம். ஜீப்கார்கள் தவி நதியின் கரையோரமாக அமைந்துள்ள சாலையின் வழியாக உதம்பூரை நோக்கி ஓட ஆரம்பித்தன. ஜம்முவின் சர்க்கார் காரியாலயமும், இராணுவ கூடாரங்களும் தென்படுகின்றன. அதற்கு அப்பால் செக்கச் செவேல் என்று ஒரு அரமனை தெரிந்தது. ஜீப் வண்டி ஓட்டி வந்த ராணுவ அதிகாரியைப் பார்த்து அந்தக் கட்டடங்களைப் பற்றியெல்லாம் விசாரிக்க ஆரம்பித்தோம்.

" இது என்ன அரமனை !"

" இதுதான் பழைய காஷ்மீர் மன்னர் ஹரி ஸிங்கின் குளிர்கால அரமனை."

" வெள்ளையாக இருப்பது !"

" இப்பொழுது ராஜப்பிரமுக்காக இருக்கும் சதர் இரியாசத் கரன்ஸிங்கின் அரமனை."

இப்படிக் கேட்டுக் கொண்டிருக்கும்போதே ஜீப் வண்டிகள் பயங்கரமான தவி நதியிலேயே இறங்கி விடுகின்றன. ஒரு கணம் மூச்சே நின்றுவிடும் போலிருக்கிறது. இவ்வளவு ஆபத்தான சாலையை இந்தியாவில் வேறு எங்குமே காண முடியாது என்று சொல்லும்படி சாலை மேலே, மேலே, மேலே போகிறது. பாம்பு போல வளைந்து வளைந்து திரும்பித் திரும்பி, ஏறி இறங்கி எந்தமாதிரி எல்லாம் சாலைகள் இருக்கக் கூடாதோ அப்படி எல்லாம் இந்தச் சாலை இருக்கிறது. இந்தச் சாலையிலே போகும் போது யாருக்கும் இரைந்து பேசக் கூடத் துணிவில்லை.

சாலை மலைமேலே ஏறிக்கொண்டே போகிறது. மலை உச்சிக்கே சென்று விடுகிறது. அங்கிருந்து பார்த்தால் இரண்டு பக்கங்களிலும் கண்ணுக் கெட்டிய தூரம் ஒரு காடுகள். சால் மரக்காடுகள் தெரிகின்றன. 'சட்'டென்று சாலை பாதாளத்தை நோக்கி இறங்குகிறது. அப்படி இறங்கும் போது பயம் பற்றிக் கொள்கிறது. கண்களை இறுக மூடிக் கொள்ள வேண்டியிருக்கிறது. கண்ணை மூடிக் கொண்டாலும் அடிவயிற்றிலிருக்கும் குடல்கள் தொண்டையில் வந்து அடைத்துக் கொள்வதை எப்படித் தடுத்து நிறுத்துவது !

இவ்வாறு பயங்கரமான சாலைகளைக் கடந்து சற்று நல்ல வழியில் ஜீப் வண்டிகள் ஓடுகின்றன. மீண்டும் முன்போலவே சாலை வளைந்து வளைந்து செல்கின்றன. ஒரு வளைவான இடத்தில் ஜீப் வண்டி திரும்புகிறது. ஜீப் வண்டியை ஓட்டிக் கொண்டு வந்த ராணுவ அதிகாரி 'சட்'டென்று ஒரு 'சல்யூட்' அடித்து விட்டு மேலே வண்டியை ஓட்டினார்.

"ஏன் இப்படிச் 'சல்யூட்' அடித்தீர்!"

" இங்குதான் பிரசித்தி பெற்ற நமது மேஜர் ஜெனரல் ஆத்மசிங் காலமானார்."

" எப்படி !"

" அது ஒரு சோகக் கதை சார் !" என்று அந்த ராணுவ அதிகாரி மேஜர் ஜெனரல் ஆத்மசிங்கைப் பற்றிச் சொன்னார்.

மேஜர் ஜெனரல் ஆத்மசிங் காஷ்மீர் போரில் அபாரமான சேவை செய்தவர். பூஞ்ச் நகரை மீட்பதற்கு நடந்த நீண்ட சமாதான

சம்பாஷணையில் ஆத்மசிங் அதி அற்புதமான சாதனைகளைச் செய்தவர். அவருடைய சாமர்த்தியத்தினால்தான் பூஞ்ச் நகரம் பாகிஸ்தானிகளிடமிருந்து மீட்கப்பட்டது. ஏராளமான மக்கள் காப்பாற்றப்பட்டனர். எத்தனையோ கொலைகளும் பயங்கரக் கொள்ளைகளும் தவிர்க்கப்பட்டன.

பூஞ்ச் நகரில் சின்னஞ்சிறு குழந்தைகளிடம் சென்று 'ஆத்மசிங்' என்று சொன்னால் மிகுந்த நன்றியுடன், 'எங்களைக் காப்பாற்றியவர்' என்று சொல்லி மகிழ்கிறார்கள்.

ஆத்மசிங் ஒரு நாள் உதம்பூரில் இருந்து ஜம்முவுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். ஜீப் வண்டியில் வந்து கொண்டிருந்தார். இந்த இடங்களில் பல இடத்தில் சாலை மகாவிஷ்ணுவின் வெள்ளை நாமம் போல வளைந்து வளைந்து செல்கிறது. அதனால் எதிர்ப் பக்கத்தில் யார் வந்தாலும் தெரிந்து கொள்ள முடியாது. அப்படிப்பட்ட பயங்கரமான வளைவு. அந்த வளைவில் திரும்பும்போது ஆத்மசிங் தமக்கு எதிரே ஒரு ராணுவ வண்டி வருவதைப் பார்த்தார். அதற்கு வழி விடுவதற்காக ஜீப் வண்டியைத் திருப்பினார். அடுத்த கணம் அவர் எதிர்பாராதது, நடக்கக் கூடாதது, நடந்துவிட்டது. அவருடைய ஜீப் வண்டி படுபாதாளமான ஆற்றில், மலைப் பாறையான காட்டாற்றில் தலைகுப்புற விழுந்து சுக்கு நூறாக நொறுங்கி விட்டது. மேஜர் ஜெனரல் ஆத்மசிங் அந்த இடத்திலேயே மடிந்தார்.

இந்த சோகக் கதையைச் சொல்வதற்குள் ஜீப் வண்டியை ஓட்டி வந்த ராணுவ அதிகாரி பலமுறை உணர்ச்சி வசப்பட்டார். சில சமயம் பேச முடியாமல் மௌனமாக இருந்தார். கடைசியில் எப்படியோ ஆத்மசிங்கின் துயரம் நிறைந்த சரித்திரத்தை ஒருவாறு சொல்லி முடித்தார்.

அவர் மடிந்த இடத்துக்கு நேரே, மலையில் அவர் இறந்து போன மாதம், தேதி அவருடைய சேவை எல்லாவற்றையும் விவரமாக எழுதி வைத்திருக்கிறது.

ராணுவ வீரர்கள் அந்த வழியைத் தாண்டும் போது தங்களையும் அறியாமல் 'சல்யூட்' அடித்து மரியாதை செய்து வருகின்றனர்.

இந்த மாதிரியான பயங்கரப் பாதைகளையெல்லாம் கடந்து, நாற்பத்து மூன்று மைல்கள் சென்றதும் "உதம்பூர் வந்தாகி விட்டது" என்றார் ராணுவ அதிகாரி.

## அப்துல்லாவின் சிறைச்சாலை

உதம்பூரில் லெப்டினட் ஜெனரல் தாப்பர் பத்திரிகையாளர்களை வரவேற்றார். பத்திரிகையாளர்களைச் சந்திப்பதற்காகவே ஜம்மு-காஷ்மீர் பகுதிகளில் உள்ள உயர்தர ராணுவ அதிகாரிகள் பெரும்பாலோர் அங்கு வந்திருந்தனர். அவர்களுக்கெல்லாம் பத்திரிகையாளர்களை அறிமுகம் செய்து வைத்தார்.

உயர்தர ராணுவ அதிகாரிகளின் உணவு விடுதியில் பத்திரிகையாளர்களுக்குக் கச்சிதமான தேனீர் விருந்து அளிக்கப்பட்டது.

சமுத்திர மட்டத்திலிருந்து மூவாயிரம் அடி உயரமுள்ள உதம்பூரில் அவ்வளவு உஷ்ணம் தெரியவில்லை. குளிர்ந்த காற்று வீசியது. லேசாகக் குளிரக் கூடச் செய்தது. அது உடலுக்கும் மனசுக்கும் இதமாக இருந்தது.

"உதம்பூரில்தானே முன்னாள் காஷ்மீர் முதன் மந்திரி ஷேக் அப்துல்லாவைக் கைது செய்து கொண்டு வந்து வைத்திருந்தது!" என்றார் ஒரு பத்திரிகையாளர்.

"ஆமாம்."

"அந்த இடத்துக்குப் போகலாமா!"

"ஓ, பேஷாகப் போகலாம்!"

உதம்பூரில் காஷ்மீர் மன்னன் வேட்டையாடும் அரமனை ஒன்று இருக்கிறது. ஒரு மலையின் சிகரத்திலே எதிரிகள் யாரும் வர முடியாத பந்தோபஸ்தான இடத்திலே அரமனை கட்டப்பட்டிருக்கிறது! இந்த இடத்தில் இவ்வளவு பிரும்மாண்டமான அரமனையை எப்படித்தான் கட்டினார்களோ! மனிதன் மட்டும் ஒரு காரியத்தைச் செய்தே தீர வேண்டும் என்று தீர்மானம் செய்தானானால் அதை நிறைவேற்றியே தீருவான் என்பதற்குச் சாட்சி கூறுகிறது இந்த அரமனை. இந்த அரமனையில் தான் முன்னாள் காஷ்மீர் முதன் மந்திரி ஷேக் அப்துல்லாவைக் கைது செய்து வைத்திருந்தார்கள். அரமனைக்குள் சென்றதும் மனதில் என்னென்னவோ எண்ணங்கள் உண்டாயின.

காஷ்மீர் மன்னர் வேட்டைக்கு வரும்போது தங்குவதற்காகக் கட்டப்பட்ட இந்த அரமனையின் வாசலைத் தாண்டியதும் அதன் விசாலமும் கம்பீரமும் கவனத்தைக் கவருகின்றன. பெரிய பிரும்மாண்டமான மதில் சுவர்கள்! நவீன வசதிகள் அத்தனையும் கொண்ட கலைமணம் கமழும் அழகான அரமனை.

"ஆகா! காஷ்மீர் மன்னர் எவ்வளவு சுக புருஷராக இருக்க வேண்டும். வேட்டைக்கு வரும்போது தங்குவதற்காகவே இப்படிப்பட்ட அரமனையைக் கட்டியிருக்கிறாரே!" என்று வியப்பு ஏற்படத்தான் செய்கிறது.

அந்த அரமனையிலிருந்து பார்த்தால் இமய மலையின் இணையற்ற அழகு நம்மை மயக்குகிறது. காடுகளின் கம்பீரம் நம் கவனத்தைக் கவ்வுகின்றன. அந்த இடத்தை விட்டுப் பிரிய மனமில்லாமலே பிரிந்து வந்தோம்.

உயர்தர ராணுவ அதிகாரிகள் விளையாட்டு மைதானம், பொழுது போக்குக் கழகம், சினிமா தியேட்டர் முதலியவைகளை எல்லாம் பார்த்துக் கொண்டே இமயமலையின் இனிய சூழ்நிலையில் மாலைப் பொழுதைக் கழித்தோம். மீண்டும் அதே பயங்கரச் சாலை வழியாக உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஜீப் வண்டிகளில் ஜம்முவுக்குப் பிரயாணமானோம்.

** ** **

ஜம்மு காஷ்மீர் ராணுவப் பகுதியில் இன்னும் எத்தனை எத்தனையோ பிரமிக்க வைக்கும் சம்பவங்களும், மயிர்க்கூச்செறியும் நிகழ்ச்சிகளும், இரத்தமே உறைந்துவிடக் கூடிய பயங்கரங்களும் நடைபெற்றிருக்கின்றன. அதையெல்லாம் போய்ப் பார்க்காவிட்டால் ஜம்மு-காஷ்மீர் ராணுவப் பகுதிக்குள் புகுந்து வந்ததில் என்ன பிரயோஜனம்! எனவே நாளைக்கு அந்தப் பகுதிகளை எல்லாம் பார்ப்பதற்குப் போகலாம். (தொடரும்)

"புது மாதிரியான பத்திரிகை; மேனாட்டிலுள்ளவை போன்று அமைந்திருக்கிறது. தமிழ்நாட்டிற்கு இத்தகைய பத்திரிகை அறிவு வளர்ச்சிக்கு நன்கு சேவை செய்ய முடியும்......"

இதெல்லாம் 'திங்கள்' முதல் இதழைப் பார்த்துப் படித்தவர்களின் அபிப்பிராயங்கள். நீங்களும் வாங்கிப் பார்த்து உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவியுங்கள்.

# திங்கள்

பிரதி ஆங்கில மாதம்

15-ம் தேதி வெளி வருகிறது

படக் கட்டுரைகள், அரிய விஷயங்கள் ஏராளமாக அடங்கியுள்ளன. கதைகள் கிடையாது.

○★○

தனிப் பிரதி விலை அணா 8

வருஷ சந்தா ரூபாய் 6

○★○

ராமநாத் பப்ளிகேஷன்ஸ்

சென்னை - 2




பாரி கம்பெனியார்
மோதிரம் போன்ற மிட்டாய்களை
இப்பொழுது வழங்குகிறார்கள்

ருசியுள்ள மூன்று விதங்களில் கிடைக்கின்றன!




ஆஹா! என்ன பேரானந்தம்! மிட்டாய்கள் சுத்தமாயும், தெவிட்டாத புதுமைச் சுவையுடனிருக்கும் வண்ணம் இலைகள் பாக் செய்யப்பட்டுள்ளன.

# காந்தி மண்டபத்தில் சர்வோதய மேளா




காந்தி மகானின் புனித அஸ்தி புண்ணிய நதிகளில் கரைக்கப் பட்ட பிப்ரவரி 12ம் தேதி கிண்டி ராஜபவனத்தில் புதிதாகத் திறக்கப் பட்டுள்ள காந்தி மண்டபத்தில் சர்வோதய மேளா வெகு சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. சுமார் 250 பேர் ஆண்களும் பெண்களுமாக மாலை நாலரைமணியிலிருந்து ஐந்தரை மணி வரை காந்தி மகானுக்கு மிகவும் உகந்த நூற்பு யக்ஞத்தில் கலந்து கொண்டனர். ராஜாஜி நூற்பு யக்ஞம் புரிபவர்களுக்கு ஆசி கூறினர். அவ்வை விடுதி, சீனிவாச காந்தி நிலையம், தக்கர்பாபா வித்யாலயம் திருவல்லிக் கேணி பட்டேல் இளைஞர் காங்கிரஸ் போன்ற சங்கங்கள்-ஸ்தாபனங்களைச் சேர்ந்தவர்களும், தனி நபர்களும் அன்று 1048 சிட்டங்கள் காணிக்கையாகச் செலுத்தினர்கள். அகில பாரத சர்வ சேவா சங்கத்தின் சார்பில் ஸ்ரீ ஊ. கங்காதரன் வரவேற்புரை நிகழ்த்தினர். திரு கே. சந்தானம் அவர்கள் தலைமையில் திரு எல். என். கோபால சாமி, ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் ஆகியவர்கள் காந்தி மகானின் அரும் சேவைகளை நினைவு கூர்ந்து பேசினர்கள். அரை மணி நேரம் பிரார்த்தனை நடைபெற்றது.

இம் மாதிரி ஒவ்வொரு மாதமும் காந்தி மண்டபத்தில் கடைசி வெள்ளிக்கிழமை பிரார்த்தனைக் கூட்டம் நடைபெறும்.

1. தலைவர் திரு கே. சந்தானமும், ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தரத் தம்பிரானும். அவர்கள் முன்பு மலை போல் காட்சியளிக்கிறது அன்று காணிக்கை செலுத்தப்பட்ட நூல் சிட்டங்கள். 2—3. ராஜாஜி நூற்பு யக்ஞத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு ஆசி கூறினர். 4. நூற்பு யக்ஞத்தில் ஈடுபட்ட பெண்களின் ஒரு பகுதி. 5.6. நூற்பு யக்ஞக் காட்சியும் பிரார்த்தனைக்கு வந்துள்ள பொது மக்களும். போட்டோ: ச. கருணாகரன்

# புதிது

எல்லாவிதத்திலும்
புதிது




புதிதும் நவீன கலைத்திறனால் செய்ததும்
புதிதும் காற்று தடைப்படாததுமான அமைப்பு
புதிதும் வலிமையுள்ளதுமான எந்திர அமைப்பு
புதிதும் அதிகப்படியுமாக்கின திறமை

**Orient**

அமைதியாகச் சுற்றும் திடமான **விசிறி**

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்
6, கோர் பிபி லெயின். கல்கத்தா-11

# யார் அதிர்ஷ்டசாலி?



ராமப்பிரியா

அன்று காலை எழுந்ததிலிருந்து எனக்கு மூச்சு விடக்கூட நேரமில்லாமல் வேலை சரியாக இருந்தது. அடுப்பில் எண்ணெய் புகைந்து கொண்டிருந்தது. பஜ்ஜிக்கு மாவை அவசரம் அவசரமாய்ப் பிசைந்து கொண்டிருந்தேன். வாசற்கதவு தடதட வென்று இடிக்கப்படும் சப்தம் கேட்டது. எழுந்து போய் மாவு பிசைந்த கையுடனேயே கதவைத் திறந்தேன். துளசி மாமி நின்று கொண்டிருந்தாள். மாமியை அழைத்துக் கொண்டு உள்ளே வந்தேன்.

துளசி மாமி, "ஏண்டி அம்மா! வீட்டில் உன்னைத் தவிர வேறு ஒருவரும் இல்லையா! ஒரு நாழியாகக் கதவைத் தட்டுகிறேனே!" என்று ஆச்சரியத்துடன் கேட்டவாறே என் அருகில் வந்து உட்கார்ந்தாள்.

அடுப்பு எரிய ஆரம்பித்ததும் மளமள வென்று நறுக்கி வைத்த காய்களை மாவில் தோய்த்துப் பஜ்ஜி போட்டுக் கொண்டே மாமிக்கும் பதில் சொன்னேன்.

"ஏன்! எல்லோரும் தான் இருக்கிறார்கள். ரமணியும் இவரும் தான் ஏதேதோ சாமான்கள் வாங்குவதற்காகக் கடைத்தெருப் பக்கம் போயிருக்கிறார்கள். குந்தளாவும் விஜயாவும் இத்தனை நேரம் எனக்கு ஒத்தாசை பண்ணிக் கொண்டுதானிருந்தார்கள். இப்போது தான் அவர்களை அலங்காரம் பண்ணிக் கொள்ளச் சொன்னேன்" என்று கூறினேன்.

ரமணி என் கணவரின் முதல்தாரத்து வயிற்றுப் பிள்ளை. விஜயா அவன் மனைவி. குந்தளா மூத்தாள் பெண். அவளைப் பெண் பார்க்க இன்று வருவதனால்தான் இந்த அமர்க்களம்.

"குந்தளாவைப் பெண் பார்க்க வருகிறவர்கள் எனக்கு நெருங்கிய உறவினர்கள் தான். ஆனால் சரஸா! அவர்கள் பணக்காரக என்று ரொம்ப எதிர்பார்ப்பார்கள். அப்படி எல்லாம் நிறையச் செய்ய முடியுமா! இப்பொழுது நிறைய இருக்கு என்று செய்து விட்டுப் பிறகு நாளைக்கு உனக்கே இரண்டு குஞ்சு குழந்தைகள் பிறந்தால் எப்படி!" என்றாள் துளசிமாமி.

"அதெல்லாம் பற்றி எனக்கென்ன மாமி கவலை! புருஷர்கள் பார்த்துக் கொள்ளுகிறார்கள்!" என்றேன் சுருக்கமாக.

விஜயாவும் குந்தளாவும் அலங்காரம் முடிந்து மாடியிலிருந்து கல கல வென்று பேசியவாறு சிரித்துக் கொண்டே வரும் சப்தம் கேட்டது.

"சித்தி! சரியாக இருக்கிறதா!" என்று நாணங்கலந்த பார்வையோடு குந்தளா என்னைக் கேட்டாள்.

அவள் சிவந்த மேனிக்கு நீலப்புடவை ரொம்பப் பொருத்தமாயிருந்தது. புடவைக்கேற்ற வெள்ளைச் சோளி. கருநாகம் போலச் சுருண்டு முழங்கால் வரை நீண்டிருந்த பின்னலில் கட்டு ஜாதி மல்லிகை. பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் போல் இருந்தது, குந்தளாவின் அலங்காரம்.

"ரொம்ப அழகாக அமைந்திருக்கிறதடி, கண்ணே! திருஷ்டி பட்டு விடும் போல் இருக்கிறது. வருகிறவர் உன்னை அப்படியே கொத்திக் கொண்டு போய் விடுவார்!" என்றேன் பெருமையாக.

"உம்! நீங்கள் எழுந்திருங்கள் சித்தி! நான் எல்லாவற்றையும் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் முகம் கழுவிப் பொட்டிட்டு, வேறே புடவை கட்டிக் கொண்டு வாருங்கள்!" என்று அன்புடன் கட்டளையிட்டாள் விஜயா.

நான் பதில் பேசாமல் எழுந்து கிணற்றடிக்குச் சென்றேன்.

முகத்தில் தண்ணீரை விட்டுக் கொண்டதும் தான் சோப்புப் பெட்டியில் சோப்பு இல்லை என்பதை அறிந்து அதை எடுத்து வர உள்ளுக்குச் சென்றேன். துளசி மாமியின் குரல் கேட்டு என் கால்கள் தாமாகவே நின்றன.

"சரஸா கூடிய மட்டிலும் நல்ல பெண் தான். இருந்தாலும் குந்தளாவுக்குக் கலியாண சமயத்தில் நிறையச் சீர் செய்யவோ நகையாகப் பண்ணவோ சரஸாவுக்கு மனம் வர வேண்டுமே! அதோடு தீவட்டி தடியன் மாதிரி தம்பி வேறு வீட்டோட......" என்று துளசி மாமி கணீரென்று சொல்லிக் கொண்டே போனாள்.

என்னால் அதற்கு மேல் நிற்க முடியவில்லை. காதில் ஈயத்தைக் காய்ச்சி விட்டது போல் இருந்தது, மாமியின் வம்பு வார்த்தைகள்.

சோப்புகூட எடுத்துக்கொள்ள வில்லை. முகமும் கழுவவில்லை. நேராக மாடியறைக்குச் சென்று மனத்திலிருக்கும் பாரம் குறையு மட்டும் அழுது தீர்த்தேன்.

என் தாயார் என்னை விட்டுப் போகும் போது எனக்கு ஆறே வயது. தம்பி முத்துவுக்கு மூன்று வயது.

என் தந்தை உடனேயே வேறு கலியாணம் செய்து கொண்டார். சித்தியாக வந்தவள் அசல் தாடகை வம்சத்தைச் சேர்ந்தவள்தான். என்னையும் முத்துவையும் அவள் படுத்தின பாடுகள், அப்பப்பா! சொல்லி முடியாது.

எனக்குக் கலியாண வயது நெருங்கியபோது சித்தி அதிகச் செலவில்லாமல் ஒரு இரண்டாம் தார வரனைப் பார்த்து, எனக்கு நிச்சயம் செய்தாள். அப்பா, என்ன செய்வார் பாவம்! சித்தியை எதிர்க்க அவருக்குத் தைரியம் ஏது!



பெப்ருவரி 14ல் நன்னிலம் தாலுக்கா ஏனங்குடி கிராமத்தில் உள்ள உயர்நிலைப் பள்ளியின் புதிய கட்டடத்தைக் கல்வி இலாகா பிரதம அதிகாரி திரு என். டி. சுந்தரவடிவேலு திறந்து வைத்தார். அன்றையதினமே மேற்படி பள்ளியின் இன்னொரு பகுதிக்குத் தஞ்சை ஜில்லா கலெக்டர் திரு என். கிருஷ்ணசாமி அஸ்திவாரக் கல் நாட்டினார். இந்தப் பள்ளி ஏழை மாணவர்களுக்கு உணவு அளிப்பதற்காக ஏனங்குடி பிரமுகர் திரு ஆர். விஜயராகவலு நாயுடு ஐந்து ஏக்கர் நிலம் வழங்கியிருக்கிறார். விழாவில் கலந்து கொண்ட தலைவர்களுடன் ஸ்ரீமதி சுந்தரவடிவேலு, டிவிஷனல் இன்ஸ்பெக்டர் திரு கோபாலன், ஜில்லா கல்வி அதிகாரி ஸ்ரீமதி சரஸ்வதி துரைசாமி, திரு கோவிந்தசாமி நாயுடு ஆகியவர்களையும் படத்தில் காணலாம்.

---

அவருக்கு என் தம்பி முத்து வயதில் ஒரு பிள்ளையும் பன்னிரண்டு வயதில் ஒரு பெண்ணும் இருப்பதாக அறிந்தேன்.

ஒரு நாள் திடீரென்று என் கணவர் கலியாணத்துக்கு முன் என் வீட்டுக்கு வந்து என்னைத் தனியே சந்திக்க வேண்டும் என்றார். என் தந்தை உடனே அவரை ஒரு அறையில் இருக்கச் சொல்லிவிட்டு என்னை அலங்காரம் செய்து கொண்டு போகும்படி சொன்னார்.

இதயம் படக் படக்கென்று அடித்துக் கொண்டது. எப்படித்தான் அவர் இருந்த அறைக்குப் போனேனோ தெரியவில்லை. அன்று தான்—அவரை நன்றாக நேருக்கு நேர் பார்த்தேன். கம்பீரமான முகத்தோற்றம். நல்ல உயரம். அவர் நான் நினைத்தபடி ரொம்பக் கிழவராக இல்லை.

“சரஸா! இங்கே வா! நான் கேட்பதற்குப் பயமில்லாமல் தைரியமாகப் பதில் சொல்ல வேண்டும். தெரிந்ததா! என்னைக் கலியாணம் செய்து கொள்ள உனக்கு இஷ்டமா!” என்றார். அவர் குரலில் இருந்த கனிவும் அன்பும் எனக்கு இதமாக இருந்தன.

“எனக்கு சர்வ சம்மதம்!” என்று தட்டுத் தடுமாறிச் சொன்னேன்.

“என் குழந்தைகள் இருவரும் வயது வந்தவர்கள். நானே சொல்லக் கூடாது. அந்தக் குழந்தைகள் இருவரும் ரொம்பத் தங்கமானவர்கள். நீயே பிறகு அறிந்து கொள்வாய். அவர்களுக்கு இதமாகத் தாய்மாதிரி இருக்க வேண்டும்” என்று சொன்னார்.

என் பயமெல்லாம் அவருடைய கனிவான குரலையும் வாத்சல்யமான பேச்சையும் கேட்டவுடனேயே பறந்து போய்விட்டது.

அவரைத் தைரியமாக நிமிர்ந்து நோக்கினேன். “நானே தாயில்லாப் பெண்ணாக இருந்து வேண்டிய கஷ்டம் அனுபவித்தவள். என் தம்பி முத்துவை நான் எவ்வளவு வாஞ்சையோடு, ஆசையோடு வளர்த்தேனோ அதே மாதிரி அந்தக் குழந்தைகளிடம் இருப்பேன்!” என்று சொன்னேன்.

அவர் திடுக்கிட்டமாதிரி, “உனக்கு முத்து என்று ஒரு தம்பி இருக்கிறானா! எனக்குத் தெரியாதே!” என்றார்.

“ஆம்! இந்த வீட்டில் நான் ஒருத்திதான் அவனுக்கு ஆதரவு. நான் போய் விட்டால் உண்மையில் கஷ்டப்படப் போகிறவன் அவன் ஒருவன்தான்!” என்று தழுதழுத்த குரலில் சொன்னேன். என்னை அறியாமல் என் கண்களில் கர கரவென்று நீர் பெருகியது.

“நீ வருத்தப்பட இனி நான் பார்க்க மாட்டேன், சரஸா! நீ நம்ப வீட்டுக்கு வரும்போது முத்துவும் உன்னுடனேயே அங்கு வரப் போகிறான்!” என்று சொல்லி எழுந்து விடை பெற்றுக் கொண்டு போய் விட்டார்.

அவர் சொன்னபடியே கலியாணம் ஆனவுடன் என்னுடன் முத்துவும் எங்கள் வீட்டுக்கு வந்தவன், அப்பொழுது முதல் அவன் எங்கள் குடும்பத்தில் ஒருவனாக ஆகிவிட்டான்.

எண்ணச் சுழலில் நேரம் போனதே தெரியவில்லை. காரியாலி விட்டதே என்று முகத்தைத் துடைத்துக்கொண்டு எழுந்து வந்தேன்.

நான் உடைமாற்றிக் கொண்டு வருவதற்கும் முத்து ஸ்டேஷனிலிருந்து பிள்ளை வீட்டவர்களை அழைத்து வருவதற்கும் சரியாக இருந்தது. சுந்தரா அவர்களை நமஸ்காரம் செய்து

விட்டு வந்தான். நானும் விஜயாவும் காப்பி பலகாரம் கொடுத்து உபசரித்தோம். என் கணவரும் ரமணியும் பிள்ளையுடனும் அவன் தகப்பனாரிடமும் பேசிக் கொண்டிருந்தார்கள். பிள்ளை வீட்டுக்காரர்கள் சற்று நேரத்துக்கெல்லாம் புறப்பட்டுத் துளசிமாமி வீட்டுக்குப் போய்விட்டு அங்கிருந்து ஊருக்குப் போவதாகச் சொல்லி விட்டுப் போனார்கள்.

மத்தியானம் முழுவதும் வேலை அதிகமாயிருந்ததால் நான் படுத்தவுடன் தூங்கிப் போய்விட்டேன். பக்கத்து அறையில் ஒரே பேச்சு சப்தம் கேட்கவும் திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன்.

"பிள்ளை வீட்டுக் காரர்களிடம் துளசி மாமி ஏதோ கலகம் பண்ணி இருக்கிறாள். அந்த அம்மாள் என்னிடம் வாய் கூசாமல் 'உங்கள் சித்தி எல்லாம் கடைசிவரை இட்டு நிரப்பிச் செய்வாளா! அவள் தம்பி வேறு வீட்டோடு இருக்கிறான் என்று கேள்விப் பட்டேன்!' என்றாள்" என்றான் ரமணி.

எனக்கு இதைக் கேட்டதும் அதிர்ச்சியால் மூச்சே நின்று விடும் போலிருந்தது. ஆவேசத்தோடு ஓடி அவர்களிருக்குமிடம் வந்தேன்.

"ரமணி! நீ போய் 'எங்கள் சித்தி நீங்கள் சொல்கிறபடியெல்லாம் நடப்பாள். மூத்துவையும் நாளைக்கே இங்கிருந்து அனுப்பி விடுகிறோம்' என்று சொல்லு, போ ரமணி! உடனே போ!" என்று கத்தினேன்.

"சித்தி! உனக்கென்ன பைத்தியமா! என்னை மீண்டும் அவர்கள் காலில் போய் விழச் சொல்கிறாயா!" என்று கேட்டான் ரமணி.

நான் பதில் பேசவில்லை. என்னுடைய கண்கள் கலங்கின.

ரமணி தன் தந்தையைப் பார்த்து, "அப்பா! என் யோசனையைக் கேட்டு அபிப்பிராயம் சொல்லுங்கள். குந்தளாவுக்கு மூத்துவைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டம் இருக்கிறது என்று தெரிந்து கொண்டேன். மூத்துதான் குந்தளாவுக்கேற்ற வரன்" என்றான்.

"ரமணி, அது சரியான தீர்மானம்! அடுத்த முகூர்த்தத்தில் நிச்சயம் செய்து விடுவோம்!" என்றார் என் கணவர் உற்சாகமாக.

"குந்தளா, ரொம்ப அதிர்ஷ்டசாலி!" என்றாள் விஜயா பெருமையுடன்.

"இல்லை, விஜயா! நானும் மூத்துவும்தான் அதிர்ஷ்டசாலிகள். இந்த அருமையான குழந்தைகளுக்குத் தாய் ஸ்தானத்தில் வந்த நான்தான் அதிர்ஷ்டசாலி! இத்தனை பெருந்தன்மையான குணம் படைத்த கணவரை அடைந்த நானே அதிர்ஷ்டசாலி! என் அருமைக் கண்மணி குந்தளாவை அடையப் போகும் மூத்துவே அதிர்ஷ்டசாலி!" என்றேன் உணர்ச்சிப் பெருக்குடன்.

"போதும் சித்தி! மொத்தத்தில் எல்லாரும் அதிர்ஷ்டசாலிகள் என்று ஒரே வார்த்தையில் சொல்லி விடுங்களேன்!" என்றான் ரமணி.

---

'வீடு கட்டிப் பார்த்தால் தெரியும்' என்பது முதுமொழி. ஒரு வீடு கட்டுவதே அவ்வளவு சிரமமென்றால் ஒரு புதிய காலனியை உருவாக்குவதென்றால் அதற்கு அயராத உழைப்பும், அசாத்தியத் திறமையும் வேண்டும். திருநெல்வேலியிலுள்ள பாளையங்கோட்டையில் அழகான வீடுகளோடு கூடிய காலனி உருவாவதற்குக் காரண புருஷராக விளங்கியவர் திரு பெருமாள் பிள்ளை அவர்கள். டெபுடி கலெக்டராகவும், கூட்டுறவு இலாகாவில் டெபுடி ரிஜிஸ்ட்ராராகவும், சிவகங்கை ஜமீனில் உதவி திவானாகவும் பணி புரிந்தவர்.



திரு பெருமாள் பிள்ளையின் குடும்பமே நிர்வாகத் திறமை மிக்க குடும்பமாக விளங்குகிறது. அவரது புதல்வர்களும், உறவினரும் சிறந்த பதவிகளை வகித்து வருகின்றனர். மூத்த புதல்வர் திரு பி. சிவசங்கரன் பிள்ளை ஐ.ஏ.எஸ். ரெவின்யூ போர்டின் காரியதரிசியாக விளங்குகிறார். இளைய புதல்வர் திரு. பி. கே. பெருமாள் வருமானவரி அதிகாரியாக இருக்கிறார். திருவாளர்கள் ஏ. உத்தண்டராமன் ஐ. ஏ. எஸ்., டாக்டர் ஏ. வி. சுப்பிரமணியம், டி. கே. அறம் வளர்த்தநாத பிள்ளை, டி. கே. சங்கரவடிவேலுப் பிள்ளை ஐ. ஏ. எஸ்., டி. கே. பழனியப்பன் ஐ. ஏ. எஸ். ஆகிய பலரின் உறவோடு இணைந்த பெரிய குடும்பம் இவரது குடும்பம்.

அயராத உழைப்பும், செயல் திறனும், பொது நலப்பணி ஆற்றலும் மிக்க திரு பெருமாள் பிள்ளையவர்கள் பெப்ருவரி 6-ந் தேதி விண்ணுலகு எய்தினார். அவரது பிரிவினால் வருந்தும் அவரது குடும்பத்தாருக்கும், நண்பர்களுக்கும், எமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# புடவையும் தேநீர் கோப்பையும்...

சௌகரியமாய்க் கையாளக் கூடியதும் தீவிர சக்தி வாய்ந்ததுமான கோத்ரெஜ் வாஷிங் சோப்புத் தூள்கள், கம்பளி, சில்க் ரேயான், பருத்தி போன்ற சலவை செய்யக் கூடிய எல்லாவிதமான ஆடைகளையும் நுண்மையான சீனா ஜாடிகள், சுகாதார நிமித்தம் உபயோகிக்கப்படும் பீங்கான் மற்றும் வீட்டுத் தளங்களையும் சிறப்பாக இந்தப் புதிய சிக்கன வழியில் சுத்தம் செய்கிறது!

சாதாரண சோப்பில் 30% சரப் பசை இருக்கையில் இவைகளில் 3%க்கும் குறைந்த அளவே சேர்ந்திருக்கிறது. ஆகவே அதே அளவு சாதாரண சோப்பைக் காட்டிலும் அதிகப்படியான துணிகளை இவைகள் சுத்தம் செய்கின்றன.

சோடாக் காரமோ அல்லது மிருதுவான அழகிய கைகளைக் கரைப் படுத்தி, துணிகளுக்குக் கெடுதல் விளைவிக்கும் காரமான ரசாயனங்களோ இதில் சேரவில்லை......ஆனால் இந்தத் தூள்களிலுள்ள ''பிரகாசிக்கச் செய்யும் ஆப்டிகல் ரசாயனம்'' துணிகளுக்கு மிருதுத் தன்மை யளிப்பதுடன், அடிந்தந் கலைக்காமலே, அதிகப்படியான வெண்மையையும் பிரகாசத்தையும் அளிக்கிறது.

## விலை மலிவு

## துரித வேலை - சிறந்தது

1 பவுண்டு, 3 பவுண்டு கார்ட்டன்கள், 56 - பவுண்டு பைகள்.

ஒரு வாளி ஜலத்திற்கு 5 தேக்கரண்டி அளவே போதுமானது. சலவை மெஷின்களுக்கு சாலச் சிறந்தது.

Godrej Regd.

ரிஜிஸ்டர்டு

# கோத்ரெஜ்

# கால்கேட் குளோரோபில் டூத் பவுடர்

வெளியிடுகிறது

## வீரிய குளோரோபிலின் பூரணநன்மைகளை




## வீரியகுளோரோபில்தான் உங்களுக்கு நன்மை தரவல்லது!

வாயில்தோன்றும் துர் நாற்றத்தை ஒழிக்கிறது. அதி துரிதமாக, பூர்த்தியாகச் செயலாற்றுகிறது! வாய்க்கு புதிய நறுமணத்தைத் தருகிறது!

பற்கள் சொத்தையாகாமல் காக்கிறது! சொத்தையாக்கும் காரணம் என பல் டாக்டர்களால் கருதப்படும் தீய அமிலங்களை ஒழிக்கிறது!

ஈறுகளைப் பலப்படுத்துகிறது! உங்கள் ஈறுகளைப் பாதுகாக்க குளோரோபிலின் தீவிர நன்மைகளைத் தருகிறது.

* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

# ரகுபதி  ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியி லிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

15

உலகத்தில் தீமை இருப்பதற்கு ஆண்டவனே காரணமும் பொறுப்பும் என்று எண்ணும்போது கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆனால் சுகத்துக்கும் சந்தோஷத்துக்கும் அவன் காரணமாக இருந்தால் துன்பத்துக்கும் தீமைக்கும் அவன்தானே காரணம். ராவணனுடைய ராக்ஷஸபலமும் ஆண்டவன் அனுமதித்துத் தானே வளர்ந்தது. அறியக் கூடாத ஒரு பொருளை அறிந்ததாக விவகரிப்பதால் குழப்பங்கள் உண்டாவது இயற்கை. கடவுளை நம்மைப் போன்ற ஒரு மனிதனாக எண்ணிப் பேசுகிறோம். அப்போது இவ்வாறான பல கேள்விகள் கிளம்புகின்றன. ஈசுவரனுடைய தன்மையையாவது குணங்களையாவது நாம் கண்டு உணர்ந்து உரைக்க முடியுமா? அவனே நியதியை அமைப்பவன். அவனே நியதி. அவனே அதை நிறைவேற்றுபவன். இவ்வளவும் ஒரு தனி மனிதன் வகிக்க முடியாதல்லவா? வகித்தால் அவனைக் கொடுங்கோலன் என்றல்லவா சொல்லுவோம். இவற்றை வகிக்கக் கூடியவன் ஈசுவரன் ஒருவனே.

[ஹரிஜன் 24—2—46]

நன்மை தீமை இரண்டுக்கும் மூலம் ஆவான் ஈசன். கொலை செய்யும் கத்தியும் நோயைத் தீர்க்கும் ரண வைத்தியன் கத்தியும் இரண்டும் அவனுடைய கருவிகளே. நன்மை தீமை இரண்டுமே அவனுடைய உபாயங்கள். ஆயினும் நமக்குள் அவ்வாறு இரண்டையும் ஒன்றாக்கிக் கொள்ள முடியாது. மக்களின் காரியங்களில் நன்மை வேறு தீமை வேறு; ஒன்று மற்றொன்றாகாது. இருளும் ஒளியும் போல் ஒன்றுக்கொன்று எதிரிடையாக நிற்கும்.

[ஹரிஜன் 20—2—37]

என்னைப் பொறுத்த மட்டில் பரம்பொருளை நம்மைப் போன்ற ஒரு பிறவியாக நான் கருதவில்லை. சத்தியமே எனக்குத் தெய்வம். நியதி வேறு நியந்தா வேறு என்று நான் எண்ணவில்லை. மனிதர்களுக்குள் அரசன் வேறு, அரசனுடைய சட்டம் வேறு. ஈசனைப் பற்றி அவ்வாறு பிரிப்பதற்கில்லை. அவனே அரசனும், அவனே சட்டமும். நம்முடைய செயல்கள் அனைத்துக்கும் அவனே காரணம். அவன் ஆணையின்படியே எந்தத் துரும்பும் அசையும். நம்முடைய சுதந்திரம் எல்லாம் கடலில் செல்லும் ஒரு கப்பலில் கூட்டமாகக் கூடியிருக்கும் பிரயாணிகளுடைய சுதந்திரத்தின் அளவே. அவ்வளவு கூட இல்லையென்று சொல்லலாம். ஆயினும் கப்பலில் செறிந்து கூடியிருக்கும் பிரயாணிகளைப் போல், நெருக்கடி உணர்ச்சி நமக்கு இல்லை.

சுதந்திரம் இருக்கிறதாகவே கருதுகிறோம். உண்மையில் ஒரு பெரிய சுதந்திரம் உண்டு-முயற்சி சுதந்திரம். நம்முடைய ஆன்ம வளர்ச்சிக்கு நாமே சுதந்திரத்தையும் பொறுப்பையும் வகித்திருக்கிறோம். முயற்சி நமதாயினும் பயனைத் தருவதும் தராததும் ஈசன் செயல். அதில் நமக்குச் சுதந்திரம் இல்லை. பயன் நம் கையில் இருக்கிறது என்று எண்ணினால் அகங்காரத்தில் சிக்கிக் கொள்வோம். பயனைப்பற்றிக் கவலைப் பட்டோமானால் துன்பத்தில் வீழ்வோம். இதுவே கீதையின் உபதேசம்.

[ஹரிஜன் 23—3—40]

**ராஜாஜி**

# கிராம தானம் என்றால் என்ன?

தெலுங்கானாவிலிருந்தபோதுதான் முதன் முதலாக வினோபா அடிகளுக்கு நில தானம் செய்யப்பட்டது. அன்றைக்கே வினோபா அடிகள் "சூரிய வெளிச்சம், காற்று, தண்ணீர் முதலியவை போலவே நிலமும் ஆண்டவனுக்குத்தான் சொந்தம். தனியார்களின் சொத்தாகக் கருதுவது கடவுளின் உரிமையை மறுப்பதாகும்; மனிதத் தன்மைக்கு விரோதமாகும்" என்று கூறினார். இதைக் கேட்ட படித்த மக்கள் இதன் பொருளையோ உட்பொருளையோ சரியாக உணரவில்லை. அத்துடன் வினோபா ஆரம்பித்திருப்பது வெறும் யாசகம் வாங்கும் இயக்கந்தான்; இது சமுதாயத்தில் எத்தகைய மாறுதலையோ புரட்சியையோ உண்டாக்கப் போவதில்லை என்று கூறி வந்தார்கள். ஒரு வருஷத்துக்குப் பின்னர் உத்தரப் பிரதேசத்தில் ஒரு முழுக் கிராமமே (மாங்கரோத்) தானமாக வழங்கப்பட்ட போதுகூட அதைப் பெரிதாக மதிக்கவில்லை. ஆனால் ஒரிஸ்ஸாவில் கோரப்புட்டு ஜில்லாவில் கிராமத்துக்குப் பின் கிராமமாக மக்கள் வழங்கத் தொடங்கிய பின்னர்தான் "பூதானம்" சாதாரண விஷயமல்ல. ஒரு சக்தி வாய்ந்த மந்திரம் என்று பாரத நாட்டுப் படித்த மக்கள் உணர்ந்தார்கள். மேலும் இனி இதை அலட்சியப் படுத்தக் கூடாது என்று நினைத்தார்கள். ஏன்! வினோபா அடிகள் பூதான இயக்கத்துக்கே புதிய திருப்பம் கொடுத்து விட்டார். ஆரம்பத்தில் தாம் சொன்னபடி நடக்கவில்லை என்று கூடச் சொல்லத் தொடங்கினார்கள்.

இந்த மொழிகள் அடிகளின் செவிகளுக்கும் எட்டின. அவர் குணபூர் என்ற ஊரில் நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தில் மேற்கண்ட வாதத்துக்குப் பின்வருமாறு பதில் கூறினார்:

"ஒவ்வொரு நதிக்கும் உற்பத்தி ஸ்தானம் என்றும் சங்கம ஸ்தானம் என்றும் உண்டு. சங்கமத்திலிருக்கும் நதியைப் பார்த்து, 'இந்த நதி உற்பத்தி ஸ்தானத்திலிருப்பது போல் இல்லையே' என்று கூறலாமா! பூதான விஷயத்திலும் இதுதான் உண்மையான நிலை. நதி உற்பத்தியாகும் இடத்திலிருப்பதைவிட மேலே மேலே எவ்வளவு பரந்தும் அகன்றும் பாய்ந்தாலும் அதன் அடிப்படைத் தத்துவத்தில் ஒரு மாறுபாடும் இல்லை. அப்படியேதான் பூதான விஷயத்திலும். அடிப்படையில் யாதொரு மாறுபாடும் ஏற்பட்டு விடவில்லை.

"நான் முதலிலேயே சொன்னேன். தானம் என்பதற்கு நான் காணும் பொருள் 'சமமாகப் பகிர்ந்து கொள்ளுதல்' என்று.

"'சமமாகப் பகிர்ந்து கொள்ளுதல்' என்பதன் பொருளை இன்னும் கொஞ்சம் விரிவுபடுத்தினால், 'நிலச் சொந்தக்காரர் என்றே யாரும் இருக்கலாகாது' என்று விளையும். ஆனால் சிலர் 'மக்களிடையே நிலத்தினிடம் பற்றுக்குப் பதிலாகத் துறவு மனப்பான்மை வளரத்தான் இது இடம் தரும். அதனால் இந்தத் துறவு மனப்பான்மைக்கு மக்களிடையே ஆதரவு இராதே' என்று கூறுகிறார்கள். நானோ பூதானம் அழிவு இயக்கமல்ல, துறவு இயக்கமல்ல, ஆக்க இயக்கம்; ஏன், இது அன்பும் பற்றும் பாசமும் வளர்க்கும் இயக்கம் என்று கூறி வருகிறேன்!

"நான் துறவை உபதேசிக்கவில்லை. ஏனெனில் துறவில் நன்மை யிருப்பதாக நான் கருதவில்லை! அதனால்தான் நிலத்தைத் தேசத்துக்கோ, அரசாங்கத்துக்கோ துறந்து விடுவதோ, அல்லது நிலத்தின் உடைமையைச் சர்க்கார் ஏற்றுக் கொள்வதிலோ நன்மை யிருப்பதாக நான் கருதவில்லை. நான் கேட்டுக் கொள்வதெல்லாம், நிலத்தைக் கடவுளின் உரிமையாக்கிவிட்டு, கிராம மக்கள் அனைவரும் ஒரு குடும்பமாக வாழ வேண்டும் என்பதுதான்.

"சமுத்திரத்தை நீந்திக் கடந்து விடுகிறேன் என்று யாரும் பிரவேசிக்கக் கூடாது. ஏனெனில் அது யாராலும் முடியாத காரியம். அதற்காக ஒருவன் குட்டைக் குள்ளேயே உட்கார்ந்திருக்க முடியுமா! அது சமுத்திரத்தை விட ஆபத்தானதாயிற்றே! தேங்கிய தண்ணீரில் எத்தனையோ வியாதிக் கிருமிகள் இருக்குமே. நமது தேக ஆரோக்கியத்துக்கே கெடுத



சுரேஷ் ராம்

லாயிற்றே! அதனால்தான் நான் மக்களைக் குட்டையிலிருந்து வெளிப்படுங்கள், அழகிய சிறு ஆறாக ஓடிப் பெருகுங்கள் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்படி நான் மக்களை, குட்டையை விட்டு வெளிப்படுங்கள் என்று கேட்டுக் கொள்வதோடு கடலில் போய் விழுந்து விடாதீர்கள் என்றும் எச்சரிக்கை செய்து வருகிறேன்.

"ஆம், ஒரு நதியானது தனது இரு கரைகளிலும் சுபிட்சத்தையும் செல்வத்தையும் வளர்த்துக் கொண்டு போவது போல் பூதான இயக்கத்தில் ஈடுபடுபவர்கள் விளங்க வேண்டும் என்று தான் கேட்டுக் கொள்ளுகிறேன். அதாவது கடலுக்கும் சிற்றாறுக்கும் இடைப்பட்ட நிலையைத்தான் விரும்புகிறேன்!

"இது விஞ்ஞான யுகம். இந்தக் காலத்தில் மனிதன் வாழ வேண்டுமானால் அவன் 'குடும்பம்' என்ற சொல்லின் பொருளை விரிவுபடுத்தி வாழவேண்டும். கிராமக் குடும்பம் என்பது பரிணமித்தால் இப்பொழுதைய

பத்ம பூஷண், முதலிய பட்டங்களை வழங்குகிறார்கள். ஆனால் இந்தப் பத்மபுரம், எல்லா பத்மங்களுக்கும் உறைவிடம்! ஆகவே, 'இங்கே யாராகிலும் பத்மஸ்ரீ பட்டம் பெற்றவர்கள் இருக்கிறார்களா!' என்று கேட்டார். சிலர் கையைத் தூக்கினார்கள். "பத்ம பூஷணங்கள் இருக்கிறார்களா!" என்று கேட்டார். முன்னை விட அதிகமான பேர் கைகளைத் தூக்கினார்கள்.

"ஆக நீங்கள் எல்லோருமே பத்ம பூஷண்கள் தானே! நல்லது. இந்தக் கிராமத்தில் வசிக்கும் குழந்தைகள் அனைவருக்கும் சரிசமமாக நல்ல உணவு, நல்ல உடை, நல்ல கல்வி கிடைக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள் அல்லவா! எல்லாருக்கும் வேலை செய்யப் பூமி கிடைத்தால் இது சாத்தியமாகும். நிலமற்றவன் என்பவனே உங்கள் கிராமத்தில் இருக்கக் கூடாது. நான் சொல்வதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா!" என்று கேட்டார். பலர் கையைத் தூக்கித் தங்கள் அங்கீகாரத்தைத் தெரிவித்தார்கள்.

குட்டையை விட்டு வெளிப்படுங்கள் என்று கேட்டுக் கொள்வதோடு கடலில் போய் விழுந்து விடாதீர்கள் என்றும் எச்சரிக்கை செய்து வருகிறேன்.

"ஆம், ஒரு நதியானது தனது இரு கரைகளிலும் சுபிட்சத்தையும் செல்வத்தையும் வளர்த்துக் கொண்டு போவது போல் பூதான இயக்கத்தில் ஈடுபடுபவர்கள் விளங்க வேண்டும் என்று தான் கேட்டுக் கொள்ளுகிறேன். அதாவது கடலுக்கும் சிற்றாறுக்கும் இடைப்பட்ட நிலையைத்தான் விரும்புகிறேன்!

"இது விஞ்ஞான யுகம். இந்தக் காலத்தில் மனிதன் வாழ வேண்டுமானால் அவன் 'குடும்பம்' என்ற சொல்லின் பொருளை விரிவுபடுத்தி வாழவேண்டும். கிராமக் குடும்பம் என்பது பரிணமித்தால் இப்பொழுதைய
தேவைக்குப் பயன்படும்! கிராமக் குடும்பம் என்ற கொள்கை மிகக் குறுகியதுமல்ல, நடைமுறைக்குக் கொண்டுவர முடியாத அளவுக்கு விரிவானதுமல்ல. காரிய சாத்தியமானது. சுபிட்ச வாழ்வு வருக்க எவ்வளவோ வாய்ப்புக்கள் அளிக்கக் கூடியது கிராமக் குடும்பம்."

இந்தப் பிரார்த்தனைக் கூட்டத்துக்குப் பிறகு கோரப்பட்டு தில்லாவின் கிராமதான எண்ணிக்கை 468 ஆக உயர்ந்தது!

அடுத்த நாள் வினோபா யுகாம்பா என்ற கிராமத்துக்குச் சென்றார். அன்று மாலை பிரார்த்தனைக் கூட்டத்துக்குச் சென்றபோது அன்பர்கள் கதர் மாலையை அணிவித்தார்கள். அதைக் கையில் ஏந்திக்கொண்டு வினோபா கூறினார்: "என் கையில் கதர் நூல் அடர்த்தியான கட்டாக இருக்கிறது. இதை அறுப்பது அவ்வளவு சுலபமல்ல. ஆனால் ஒரு நூலை எடுத்தால் சுலபமாக அறுத்து விடலாம். ஒற்றுமையாக வாழ்ந்தால் அதிக பலமும் சக்தியும் பெறுவீர்கள். இதை நீங்கள் நன்றாகச் சிந்தித்துப் பார்த்து, உங்கள் கிராமத்தைத் தானமாகக் கொடுங்கள். பிறகு கிராம ராஜ்யத்தை எப்படி ராமராஜ்யமாக்கிக் கொள்ளலாம் என்று திட்டம் வகுப்பது சுலபமாக இருக்கும்.

"ஆனால் இன்று நமக்குச் சுயாட்சியிருக்கிறது! அது எங்கேயிருக்கிறது — டில்லியிலா! கட்டாக்கிலா அல்லது புவனேசுவரிலா! புவனேசுவரில் சூரியோதயமானால், உங்கள் கிராமத்தின் இருளை அது நீக்குவதில்லை. உங்கள்

இருக்கிறார்களா!' என்று கேட்டார். சிலர் கையைத் தூக்கினார்கள். "பத்ம பூஷணங்கள் இருக்கிறார்களா!" என்று கேட்டார். முன்னை விட அதிகமான பேர் கைகளைத் தூக்கினார்கள்.

"ஆக நீங்கள் எல்லோருமே பத்ம பூஷண்கள் தானே! நல்லது. இந்தக் கிராமத்தில் வசிக்கும் குழந்தைகள் அனைவருக்கும் சரிசமமாக நல்ல உணவு, நல்ல உடை, நல்ல கல்வி கிடைக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள் அல்லவா! எல்லாருக்கும் வேலை செய்யப் பூமி கிடைத்தால் இது சாத்தியமாகும். நிலமற்றவன் என்பவனே உங்கள் கிராமத்தில் இருக்கக் கூடாது. நான் சொல்வதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா!" என்று கேட்டார். பலர் கையைத் தூக்கித் தங்கள் அங்கீகாரத்தைத் தெரிவித்தார்கள்.

அன்றுமாலை பிரார்த்தனைக் கூட்டம் நடைபெற்றது. மக்கள் மாலை இளம் வெயிலைப் பொருட்படுத்தாது உட்கார்ந்திருந்தனர். வினோபா அடிகளுக்கு மட்டும் ஒரு மரக்கட்டில் போட்டிருந்தனர். அதற்குமேல் கிழக்குப் பனை ஓலைகளைக் கொண்டு சிறு பந்தல் போட்டு வைத்திருந்தனர். பிரார்த்தனை ஆனதும் வினோபா எழுந்திருந்து, கூட்டத்தின் நடுவே நின்று கொண்டு மிக உருக்கமாகப் பேசினார்.

"கடவுள் உலகுக்கு ஒவ்வொரு குழந்தையையும், பணக்காரர் வீட்டுக்காரனாலும் சரி, ஏழையின் வீட்டுக்காரனாலும் சரி, அம்மணமாகத்தான் அனுப்பி வருகிறார் என்பது உங்களுக்குத் தெரியும். அது மட்டுமா! இவ்வுலக வாழ்வை விட்டுப் பிரியும்போதும் எல்லாவற்றையும் இங்கே விட்டு விட்டுப் பிறந்த மாதிரித்தான் போகவேண்டியிருக்கிறது. இதிலிருந்தே கடவுளின் விருப்பம் என்னவாக இருக்க முடியும் என்று ஊகிக்கலாம். அவரைப் பொறுத்த வரையில் மனிதனுக்கு மனிதன் எவ்வித வித்தியாசமும், பாகுபாடும் கிடையாது. அவர் நோக்கில் எல்லோரும் சமம்.

"ஒவ்வொருவரும் காற்று சுவாசிக்க வேண்டியிருக்கிறது. அதனால் ஒவ்வொருவருக்கும் மூக்கை வைத்தார். அவர் பணக்காரருக்கு இரண்டு மூக்கு, மந்திரிக்குப் பத்து மூக்கு என்று வைத்திருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை. தலைக்கு ஒரு மூக்குத்தான் வைத்தார். யாரும் அந்த மூக்கின் வழி

# எல்லோருக்கும் தெரியும் —




ஆகையால்தான்
மற்றெந்தத்
தேயிலையையும்
விட அதிகப்படியான
ஜனங்கள்

**ப்ரூக்**
**பாண்ட்**
**தேயிலையையே**

அருந்துகிறார்கள் !



லக்ஷ்மியின்

# அமர தாரா

ஆனந்தி

அத்தியாயம் 34

## வசந்தம் வந்தது

நானும் சிறு வயது முதல் நம் நாட்டில் பருவங்கள் மாறுவதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் சீமையில் குளிர் காலம் நீங்கி வஸந்த காலம் வருகிறபோது அதன் அழகுக்கு ஈடாக எதையும் வைத்துக் கூறவே முடியாது.

சூசி சூசியாக மழையும், மாவு மாவாகப் பனியும் பெய்து கொண்டிருக்கும் குளிர்காலம் ஒரு நாள் திடீரென்று போய் விடும். முதன் முதலில் "பனித் துளி" என்ற பெயருள்ள வெண்ணிற புஷ்பங்கள் தலையை நீட்டி எட்டிப் பார்க்கும். இயற்கை அன்னையின் தூதர்கள் இந்தப் புஷ்பங்கள் என்று நான் நினைக்கிறேன். பனி முழுதும் கரைந்து விட்டதா? இனி மேல் எல்லா விதைகளும் முளைக்கலாமா? எல்லாச் செடிகளும் பூக்க ஆரம்பிக்கலாமா? என்று தெரிந்துகொள்வதற்காக இந்தப் பனித்துளியை முதன் முதலில் இயற்கை அன்னை வெளியே அனுப்பிப் பார்க்கச் சொல்லுவாள் போலும்.

இவை புஷ்பிக்க ஆரம்பித்த பத்து நாட்களுக்கெல்லாம் வான வில்லின் அழகிய வர்ண ஜாலங்களைக் குழைத்துப் பூசிய விதவிதமான புஷ்பங்களைப் பூமிதேவி வெளியே அனுப்புவாள். மஞ்சளில்தான் எத்தனை வித்தியாசமான மஞ்சள்கள்? 'டாபிடில்' மலர் ஒருவித மஞ்சள். 'பட்டர் கப்'

லர் இன்னொரு விதமான மஞ்சள். வப்பில்தான் எத்தனை விதங்கள்! பாப்பி" புஷ்பத்தின் சிவந்த இதழ்ளும், கறுத்த உட்புறமும் பார்க்கத் தெவிட்டாத அற்புதம். ரோஜாக்களில் விதம் விதமான சிவப்புக்கள். 'பிரிம் ரோஸ்' என்னும் புஷ்பம்தான் எத்தனை அழகு! 'ப்ளூ பெல்' என்னும் புஷ்பம் பார்க்க ஒரு சின்னஞ் சிறு மணியைப் போலவே இருக்கும்.

தன் மணாளனைப் பார்க்கச் செல்லும் மங்கை தன்னைக் கவனத்துடன் அலங்கரித்துக் கொள்வதுபோல் பூமிதேவி வசந்த காலத்தில் புஷ்ப ஆபரணங்களாலும், பசுமை நிற ஆடைகளாலும் தன்னை அலங்கரித்துக் கொள்கிறாள் என்று தோன்றும்.

இளவேனிற் காலத்தில் மன்மதனும் ரதியும் மலர்க் கணைகளுடன் பவனி வருவார்களாம். அது உண்மையோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் இந்துவைப் பற்றிய ஞாபகம் எனக்கு அளவிலாத வேதனையை அளித்தது என்பது மட்டும் உண்மை.

செயின்ட் ஜான் கல்லூரிக்குப் பின்னால் "பிரிட்ஜ் ஆப் ஸை" என்ற ஒரு அழகிய பாலம் இருக்கிறது. கேம்பிரிட்ஜில் எல்லாக் கல்லூரிகளும் அநேகமாக 'கேம்' நதியின் கரையில் கட்டப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கல்லூரிக்குப் பின்னாலும் நதியைக் கடப்பதற்குப் பாலம் இருக்கும். கேம் நதியில் எப்போதும் யாராவது படகு ஓட்டிப் போய்க் கொண்டே இருப்பார்கள். மாணவர்களுக்குப் படகு ஓட்டுவது என்றால் தனி உற்சாகம்.



வஸந்த காலத்தில் அந்தக் காட்சியின் அழகை வர்ணிக்கவே முடியாது. "ப்ரிட்ஜ் ஆப் ஸை" பாலத்திலிருந்து பார்த்தால் கேம் நதியின் இரு கரைகளும் மிக அழகாக இருக்கும். "விப்பிங் வில்லோ" என்ற மரங்களும், "பீச்" மரங்களும், "எல்ம்" மரங்களும் ஓங்கி வளர்ந்திருக்கும். நானும் ஹிம்மெல்லும் இந்தப் பாலத்தின்மீது தனியாக நடந்து கொண்டிருந்தோம்.

"எத்தனை அழகான பாலம் பார்த்தாயா? இதற்கு ஏன் இப்படி ஒரு விசித்திரமான பெயர் வைத்திருக்கிறார்கள் என்று தெரியவில்லை. பெருமூச்சுப் பாலம் என்றால்



என்ன பொருள்?" என்று ஹிம்மெல்லைக் கேட்டேன்.

"இது தெரியாதா உனக்கு? 'வெனிஸ்' நகரத்தில் இதேபோல ஒரு பாலம் இருக்கிறது. அது சிறைக்குப் போகும் வழியில் இருக்கிறது. ஆகவே சிறை செல்லும் கைதிகள் பெருமூச்சு விட்டுக் கொண்டே அதைத் தாண்டிப் போவார்கள் என்று அந்தப் பெயர் வழங்கி வருகிறது. பார்ப்பதற்கு அதைப் போலவே இதுவும் இருப்பதால் இதற்கும் அதே பெயர் வந்துவிட்டது" என்றான் ஹிம்மெல்.

நான், என்னையும் அறியாமல் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டேன்.

"பேஷ்! பேஷ்! இந்தப் பாலத்தில் வந்து நின்றதும் உனக்குக் கூடப் பெருமூச்சு வருகிறது. அது இந்தப் பெயரின் குற்றம் என்றுதான் நினைக்கிறேன். நீ இப்போது ஒன்றும் சிறைக்குப் போகவில்லையே?" என்றான்.

"இந்த 'விப்பிங் வில்லோ' மரங்களைப் பார்த்தால் தன்னையறியாமல் பெருமூச்சு வருகிறது. ஹிம்மெல்! ஒரு பெண் தலையை விரித்துப் போட்டுக் கொண்டு விம்மி அழுவது போல இல்லையா? அதைப் பார்க்கும்போது நெஞ்சில் வேதனை உண்டாகிறது" என்று கூறினேன்.

"ராய்! இது நல்ல அறிகுறி இல்லை. விப்பிங் வில்லோவைப் பார்த்து இப்படிப் பெருமூச்சு விடுகிறவன் இங்கே படித்துப் பரீட்சை எழுத முடியாது. அதெல்லாம் காதலர் உலகத்துக்கு விட்டுவிடுவோம். நாம் மாணவர்கள் உலகத்திலேயே இப்போது இருப்போம். அதற்கு வேண்டிய அவகாசம் பின்னால் கிடைக்கும்" என்றான் ஹிம்மெல் சிரித்துக் கொண்டே.

"இரண்டும் வேறு உலகமா? எனக்கு அப்படித் தெரியவில்லையே. இந்தக் கல்லூரிகளில் காதல் விவகாரத்தில் சம்பந்தப்படாதவர்கள் நீ, நான், அரவிந்த் மூன்று பேர்களுந்தான் என்றல்லவா தோன்றுகிறது" என்றேன்.

ஹிம்மெல் மறுபடியும் சிரித்து விட்டு, "எனக்குப் போதுமான காரணம் இருக்கிறது. ஒரு ஜெர்மனிக்காரனால் இங்கிலீஷ் பெண்ணை விரும்ப முடியாது. இரண்டாவதாக ஏற்கனவேயே ஜெர்

மனியில் நான் மணந்து கொள்ளப் போகும் பெண்ணைத் தேர்ந்தெடுத்து விட்டேன். இந்த இரண்டு காரணங்களும் போதாதா? ஆனால் உன் விஷயம் என்ன?'' என்றான்.

''எனக்கும் அப்படித்தான் என்று வைத்துக் கொள்ளேன்.''

''அப்படியா? ஆனால் இந்தியாவில் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ளும் வழக்கம் கிடையாதென்று கேள்விப் பட்டிருக்கிறேனே?''

''உண்மைதான். ஆனால் எனக்கு யார் தேர்ந்தெடுப்பார்கள்? நான்தான் பெற்றோர் இல்லாதவனாயிற்றே. ஆகவே நானாகவே தீர்மானித்து விட்டேன்.''

''அப்படியானால் பெண் விட்டார் சம்மதித்து விட்டார்களா?''

''சம்மதித்து விட்டார்கள், அவளுடைய தாயார் என்னிடம் தன் மகளை மணந்து கொள்ள வேண்டுமென்று வாக்குறுதி பெற்றுக் கொண்டு இறந்து போனாள். அவளுடைய வளர்ப்புத் தந்தையும் சம்மதித்து விட்டார். நான் திரும்பிச் சென்றதும் திருமணம் நடைபெறும்'' என்றேன்.



''ஆனால் உனக்கு யாரிடமிருந்தும் கடிதம் வருவதே இல்லையே. உன் கல்லூரிப் பேராசிரியர் எழுதியதாக ஒருதடவை கூறினாய். அதைத் தவிர வேறு எதும் கடிதம் வந்ததாக எனக்குத் தெரியவே இல்லையே. மிஸஸ். ஹார்வி கூட 'உனக்கு வாரத்துக்கு மூன்று கடிதங்கள் வருகின்றன. ராய்க்கு அவன் வந்ததிலிருந்து ஒரு கடிதம்தான் வந்திருக்கிறது' என்று கூறினார். ஏன் அப்படி?'' என்று கேட்டான்.

என் நெஞ்சத்தை எந்தக் கேள்வி உறுத்திக் கொண்டே இருந்ததோ அதை ஹிம்மெல் கேட்டு விட்டான். 'நான் தவறாமல் எழுதிக் கொண்டிருக்கிறேனே. ஏன் கடிதம் வரவில்லை? உடம்பு சரியாக இல்லை என்று கப்பல் புறப்பட்ட தினத்தில் தங்கபாண்டியனிடமிருந்து கடிதம் வந்ததே. அதன் பிறகு ஒன்றும் வரவில்லையே. இந்துமதிக்கு ஏதாவது நேர்ந்து விட்டதோ? ஒருவேளை இந்த உலகத்தை விட்டே போய் விட்டாளோ? எனக்குத் தெரிவித்தால் மனமுடைந்து போய் விடுவேனென்று யாரும் கடிதமே எழுதாமலிருக்கிறார்களோ? கடவுளே! இது என்ன வேதனை? இதை எப்படிப் பொறுத்துக் கொள்வது? இன்னும் எத்தனை நாட்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்? தங்கபாண்டியனாவது எழுதக் கூடாதா?' என்றெல்லாம் ஒரே கேள்வி மயமாக உள்ளத்தில் எழுந்தது.

இவைகளை யெல்லாம் என்னால் ஹிம்மெலிடம் விவரித்துக் கூற முடியவில்லை. ''நாங்கள் கடிதம் எழுதிக் கொள்ளும் வழக்கமில்லை'' என்று கூறிச் சமாளித்துக் கொண்டேன். இந்த விஷயங்களை யெல்லாம் அவனிடம் விவரித்துக் கூறினால் அழுகை வந்து விடுமோ என்று பயமாக இருந்தது. சொப்பத் திடசாலியான ஹிம்மெலின் முன்பு நான் கோழை மாதிரி நடந்துகொள்ளச் சிறிதும் விரும்பவில்லை.

''உன் முகத்தைப் பார்த்தால் வஸந்த காலத்தில் உலாவ வந்தவனைப் போலவே இல்லையே. லண்டன் நகரில் மழைக் காலத்தில் தெருவில் நடந்து செல்லுபவன் முகம் மாதிரியல்லவா இருக்கிறது'' என்றான் ஹிம்மெல்.

''இங்கே இப்படி நேரத்தை வீணாக அடிக்க வேண்டாம். போய்ப் பாடங்களைப் படிக்கலாம் வா'' என்று சொல்லிக் கொண்டே வீட்டுக்குக் கிளம்பினேன்.

''இன்று எனக்கு ஓய்வு இருக்கிறது. நாம் பிட்ஸ்வில்லியம் பொருட் காட்சி சாலைக்குப் போகலாம். ரொம்ப முக்கியமான விஷயங்களை யெல்லாம் அங்கே பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அற்புதமான கலைப் பொக்கிஷங்களெல்லாம் அங்கே இருக்கின்றன. சரித்திர ஆராய்ச்சிக்கு வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. வருகிறாயா?'' என்றான் ஹிம்மெல்.

''இன்று ஒன்றும் வேண்டாம். வீட்டுக்குப் போகலாம் வா. எனக்குப் படிக்க வேண்டும்'' என்று நான் வேகமாக நடந்தேன்.

ஹிம்மெல் என் கையைப் பிடித்துக் கொண்டு, ''எனக்குத் தெரிந்துவிட்டது.

# டி.எஸ்.ஆர்

சந்தனாதி & அரைக்கீரை
விதைத் தைலங்கள்

கூந்தல் பாதுகாப்பு,
குளிர்ச்சி, நறுமணம்
இவற்றை அளிக்கிறது




## டி.எஸ்.ஆர் & கோ, கும்பகோணம்.

கல்கத்தாவில் கிடைக்குமிடம்: கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, [illegible] ரோடு, கல்கத்தா-26
சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: [illegible], 18, ராயப்பேட்டை ஹைரோடு ○ கோயமுத்தூர்,
பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி, (ஸ்தாபிதம் 1932), வைஸ்யாள் தெரு, கோயமுத்தூர்

---

கரகரப்பான ... புதிய... சுவை மிகுந்த...

சிறந்த பிஸ்கோத்துகள்

# பிரிட்டானியா



உன் மனம் இந்தியாவுக்குப் போய் விட்டது. அதுதான் காரணம்'' என்று கூறிக் கொண்டே வந்தான்.

வீட்டை அடைந்ததும் நேரே அறைக்குப் போய் என் படுக்கையில் விழுந்தேன். உடம்பெல்லாம் வலித்தது. தலையை வேறு வலித்தது. என்னென்னவோ கற்பனைகள் எழுந்தன. இந்துமதி இறந்து விட்டது போலவும், மந்திரமூர்த்தி கதறுவது போலவும் கற்பனை செய்து கொண்டேன்.

'இந்துவின் 'பீதி' நிறைந்த முகம் நான் குங்குமத்துறையிலிருந்து புறப்பட்ட போது தோன்றியதே. அவளுடைய உயிருக்கு ஆபத்து ஏற்படுமென்று நான் அப்படித் தோன்றியதோ? நான் மறுபடியும் ஒரு தடவை எப்படியாவது இந்துவைப் பார்த்து விட்டுத்தான் வந்திருக்க வேண்டும். பார்க்காமல் வந்தது எவ்வளவு பெரிய பிசகு? இனிமேல் எப்போதேனும் பார்க்க முடியப் போகிறதா?'

திடீரென்று நான் இப்படித் துயரப் படுவது எவ்வளவு பைத்தியக்காரத்தனமென்று தோன்றியது. 'இப்போது என்ன நடந்து விட்டது? இந்துவுக்கு ஏதாவது நேர்ந்திருந்தாலும் தெரிவித்து விடும்படி எழுதுகிறேன்' என்று நினைத்து உடனே தங்கபாண்டியனுக்கு என் மன வேதனையை விவரித்து ஒரு கடிதம் எழுதினேன். அதைத் தபாலில் சேர்த்த பிறகு தான் கொஞ்சம் மன அமைதி உண்டாயிற்று.

சில நாட்கள் கழித்துக் கல்லூரியிலிருந்து எனக்கு ஒரு சிறிய கடிதம் வந்தது. அதில் தங்கபாண்டியன் படிப்பை நிறுத்தி விட்டதாகவும், அவன் எங்கே இருக்கிறானென்று தெரியவில்லை என்றும், குறிப்பிட்டிருந்தது. மேலும் நான் அவனுக்கு எழுதிய கடிதத்தைக் குங்குமத்துறைக்கு அனுப்பியதாகவும், அங்கும் அவன் இல்லை என்று கடிதம் திரும்பி வந்து விட்டதாகவும் கல்லூரித் தலைவர் எழுதச் சொல்லியிருந்தார். எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்துக்கு அளவே இல்லை. எல்லாம் ஒரே புதிராக இருந்தது. இந்துவிடமிருந்து கடிதம் வரவில்லை. தங்கபாண்டியனைப் பற்றித் தகவலே யாருக்கும் தெரியவில்லை. ஒரே மர்மமாக அல்லவா இருக்கிறது. துப்பறியும் நாவல்களில் வருவது போல் அல்லவா இருக்கிறது என்று எண்ணி எண்ணி வேதனைப் பட்டேன். படிப்பே புத்தியில் ஏறமாட்டேனென்கிறது. மனம் ஒரேயடியாகக் குழம்பிப் போயிற்று. ''என்ன ஆகியிருக்கும்? என்ன ஆகியிருக்கும்?'' என்ற கேள்விகள் சுழன்று சுழன்று வந்தபோதிலும் விடை என்னமோ கிடைக்கவில்லை.

நான் அந்தக் கடிதம் வந்த தினம் எனது ஆசிரியர் ஸ்ரீ ஆன்ட்ரூஸ் அவர்களிடம் போயிருந்தேன். நான் ரொம்பச் சோர்வாக இருப்பதைப் பார்த்துவிட்டு அவர் அன்போடு என்ன விஷயம் என்று விசாரித்தார். அதைப் பற்றி என்னவென்று அவரிடம் சொல்ல முடியும்?

''என் நண்பனைப் பற்றி விசாரித்து எழுதியிருந்தேன். அவன் படிப்பையும் விட்டு விட்டானும். அவனுடைய வீட்டிலும் இல்லையாம். என்ன ஆயிற்று என்றே தெரியவில்லையாம். இப்படி என் கல்லூரியிலிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. எனக்கு அது கொஞ்சம் வருத்தமாக இருக்கிறது. வேறொன்றுமில்லை'' என்றேன்.

''இவ்வளவுதானே? எப்போதும் தூரதேசத்திலிருப்பவர்களுக்குத் தன் தாய் நாட்டைப் பற்றியும், உறவினர்களைப் பற்றியும் அதிகமாகக் கவலை ஏற்படும். இதே விஷயம் நீ இந்தியாவில் இருந்தால் உனக்கு இவ்வளவு கவலை அளிக்காது. எங்கேயாவது வேலை பார்த்துக் கொண்டிருப்பான், அல்லது உல்லாசப் பிரயாணம் போயிருப்பான் என்று நினைத்திருப்பாய். தூரத்தில் இருப்பதால் கவலைகள் இரண்டு மடங்கு அதிகமாகத் தெரியும். நீ கவலைப்படாதே. தானாகவே விஷயம் தெரியும் பார். இப்போது என்னோடு வீட்டுக்கு வந்து 'டீ' சாப்பிட்டு விட்டுக் கொஞ்சம் உற்சாகப் படுத்திக் கொண்டு போகலாம் வா!'' என்று அழைத்தார்.

## அத்தியாயம் 35

# இந்துவின் படம்

நாங்கள் அனைவரும் பேராசிரியர் ஆன்ட்ரூஸ் வீட்டுத் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தோம். பச்சைப் பசேலென்று பசும் புல் தரை மிருதுவாகக் கண்ணுக்குக் குளுமையாக இருந்தது. தோட்டத்தில் ரோஜாச் செடிகளும் இன்னும் பலவிதமான வர்ணச் செடிகளும் மிக நேர்த்தியாக வளர்க்கப்பட்டிருந்தன. இளவேனிற் காலமாதலால் எல்லாம் பூத்துக் குலுங்கின.

அவற்றின் அழகை அனுபவித்துக் கொண்டே நான் மௌனமாக இருந்தேன். என் எதிரில் மேஜையின் மீது ரொட்டிகளும், டீயும் இருந்தன. ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ் கிண்ணங்களில் டீயை விட்டுக் கொண்டிருந்தார். மிரியம் தன் தகப்பனுடன் ஏதோ வாதாடிக் கொண்டிருந்தாள். ஜான் தன்னுடைய காதலியை அழைத்து வந்திருந்தான். நான் அவர்கள் பேச்சை அதிகமாகக் கவனிக்கவில்லை. எனக்கு இந்துமதியைப் பற்றிய கனவுலகில் சஞ்சரிப்பது அதைவிட இன்பமாக இருந்தது.

ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ், "மிஸ்டர், ராய்! டீ சாப்பிடுங்கள்" என்று கூறியதும் தான் நான் விழித்துக் கொண்டேன்.

"இன்று ராய் ரொம்பத் தீவிரமான சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறார்" என்றான் ஜான் சிரித்துக் கொண்டே.

நான் டீ கிண்ணத்தைக் கையில் எடுத்துக் கொண்டு சாப்பிடத் தொடங்கினேன். சற்று நேரத்துக் கெல்லாம் ஜானும் எலிஜாவும் எங்கோ வெளியே சென்று விட்டார்கள்.

நான் பேச வேண்டுமே என்பதற்காக, "உங்கள் தோட்டத்தை மிக நன்றாக வைத்துக் கொண்டிருக்கிறீர்களே!" என்று ஸ்ரீமதி ஆன்ட்ரூஸைப் பார்த்துக் கூறினேன்.

"எனக்குப் புஷ்பங்கள் என்றால் ரொம்பப் பிரியம்" என்றார் அவர்.

"இது என்ன பிரமாதமான தோட்டம்? இயற்கை அன்னையின் அற்புதமான தோட்டங்களை விட உயர்வானது எங்குமே கிடையாது."

"அது உண்மைதான். யார் இல்லை என்கிறார்கள். அதற்காகத் தோட்டத்தில் ஒரு செடியும் வைக்க வேண்டாம் என்று சொல்கிறீர்களா?"

"நீங்கள் எதற்குச் சண்டை போட வேண்டும் அம்மா? அப்பாவுக்கு நம் தோட்டம் ரொம்ப அழகாக இருக்கிறது என்று மிகவும் பெருமை. ஆனால் சும்மா அப்படிச் சொல்கிறார்."

"அதெல்லாம் ஒன்றுமில்லை. ஜீஸஸ் காலேஜ் தோட்டம் எவ்வளவு அழகாக இருக்கிறது, நீ பார்த்ததில்லையா?"

"இங்கே வரும் வழியில் மிக உயரமான சுவர்களுடன் ஒரு பெரிய காலேஜ் இருக்கிறதே, அதுதானே? அதில் தோட்டம் ஒன்றும் இருப்பதாகவே தெரியவில்லையே!"

"ஆமாம், அதுதான். உங்களைப் போல இங்கே எல்லோரும் அதன் சுவர்களைப் பார்த்து விட்டு அதற்குப் 'புகைபோக்கி' என்று விளையாட்டாகப் பெயரிட்டு அழைக்கிறார்கள்."

"பொருத்தமான பெயர்தான்."

"இப்போது நாம் என்ன செய்யலாம்? ஜானும் எலிஜாவும் சினிமாவுக்குப் போய் விட்டார்கள். எனக்கு இன்று ஒரு வேலையும் இல்லை. நாம் எங்கே யாவது போவோமா?" என்று என்னைக் கேட்டாள் மிரியம்.

எனக்குக் கூச்சமாக இருந்தது. "இல்லை, நான் வரவில்லை!" என்றேன்.

ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ் என்னைப் பார்த்துப் புன்னகையோடு, "ஒரு பெண் மணி ஒருவரைப் பார்த்து, 'வெளியே அழைத்துக் கொண்டு போகிறீர்களா?' என்று கேட்டால் மாட்டேனென்று சொல்லலாமா மிஸ்டர் ராய்? எங்கே யாவது போய் விட்டு வாருங்கள். சும்மா படித்துக் கொண்டே இருந்தாலும் பிரயோஜனமில்லை. எல்லோருடனும் கல கலப்பாகப் பழகவும் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்றார். அவர் அன்போடு கூறிய விதம் எனக்குப் பிடித்திருந்தது. ஆனாலும் அழைத்துப் போவதற்குத் தயக்கமாக இருந்தது.

"பாவம்! அவனுக்குக் கூச்சமாக இருக்கிறது. நமது வழக்கங்கள் அவனுக்கு முற்றிலும் புதிதல்லவா?" என்றார் பேராசிரியர்.

அவர் அப்படிக் கூறியது எனக்கு இன்னும் சங்கடமாக இருந்தது.

"ஆமாம்; ஆனால் எத்தனை நாள் அந்த ஓட்டுக்குள் பதுங்கிக் கொண்டிருப்பது? என்றைக்காவது ஒரு நாள் வெளியே வந்துதானே தீரவேண்டும்?" என்றார் ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ்.

இப்படி இவர்கள் பேசிக் கொண்டே இருக்கப்போகிறார்களே என்ற பயத்தில், "சரி! போகலாம்!" என்றேன்.

"நல்லது! நல்லது!" என்று ஆமோதித்தார் ஸ்ரீமதி ஆன்ட்ரூஸ்.

நாங்கள் அன்று ஏதோ ஒரு சினிமா பார்த்து விட்டுத் திரும்பி வந்தோம். அதன் பிறகு நான் எப்போதாவது சமயம் நேர்ந்தால் மிரியத்தைச் சினிமாவுக்கோ அல்லது டீ சாப்பிடுவதற்கோ அழைத்துச் சென்றிருக்கிறேன்.

மிரியம் கபடமில்லாத பெண். மனத்தில் தோன்றுவதைப் பளிச்சென்று சொல்லி விடுவாள். அவளும் சரித்திரப் பாடம் படிப்பவளாதலால் நாங்கள் இருவரும் அதைப் பற்றித் தர்க்கம் செய்வோம்.

"நீங்கள் சரித்திர ஆராய்ச்சி மட்டும் செய்து அதையே உங்கள் வேலையாகவும் செய்து கொண்டீர்களானால் ரொம்ப உன்னத ஸ்தானத்தை அடைவீர்கள்! எதற்காக ஐ. சி. எஸ். படிப்பை எடுத்துக் கொண்டீர்கள்?" என்பாள் மிரியம்.

"எனக்கு அதனால்தானே உபகாரச் சம்பளம் கிடைத்தது. இல்லாவிட்டால் யார் கொடுத்திருப்பார்கள்!" என்று பதில் கூறுவேன் நான்.

ஒரு சமயம் என் அனுபவங்களைப் பற்றி மிரியத்திடம் கூறியபோது, "நீங்கள் இப்படிப்பட்ட துயரங்களை அனுபவித்தும் இவ்வளவு பண்பாடு உடையவராக இருப்பதைப் பார்த்தால் எனக்கு வியப்பாக இருக்கிறது. உங்கள் மனோ திடத்தை நான் மிகவும் போற்றுகிறேன்" என்றாள்.

நாங்கள் ஒரு நாள் அரண்மனைக் குன்றைப் பார்க்கச் சென்றோம். அது ஒரு செய் குன்று. அதன் மீது ஏறிப் பார்த்தபோது கேம்பிரிட்ஜ் நகரம் மிக அழகாக இருந்தது.

"நீங்கள் சரித்திர ஆராய்ச்சி மாணவராயிற்றே. இந்த இடத்தின் வரலாற்றைக் கூறுங்கள் பார்ப்போம்" என்றாள் மிரியம்.

"எனக்குத் தெரியவில்லை. ஆனால் இது பழைய காலத்தில் கேம்பிரிட்ஜ் நகரத்துக்குப் பாதுகாப்புக்காகக் கட்டப் பட்டிருக்கலாமென்று நினைக்கிறேன். ஆனால் இதற்கு அரண்மனைக்குன்று என்று ஏன் பெயர் வந்தது?"

"இந்தச் செயற்கைக் குன்றைக் கட்டுவதற்கு முன்னால் 'வில்லியம் தி கான்கரர்' என்ற அரசர் காலத்தில் இங்கே ஒரு அரண்மனை கட்டப்பட்டிருந்ததாம். இருபத்தேழு வீடுகளை இடித்துத் தள்ளி விட்டு அதை அவர் கட்டினாராம். அதை ஒரு சிறையாக உபயோகப் படுத்தினார்களென்று தெரிகிறது. ஆறாவது ஹென்றி காலத்தில் இது 'கூரை இடிந்து பாழடைந்து' கிடந்ததாக ஒரு சாசனத்தில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. பிரசித்தி பெற்ற மந்திரி ஆலிவர் க்ராம்வெல் பதினேழாம் நூற்றாண்டில் இதைப் புதுப்பித்துக் கட்ட ஆரம்பித்தாராம். ஆனால் முடியவில்லை. இங்கே ஆராய்ச்சி செய்ததில் ரோமானியர்கள் இங்கே வந்திருந்ததற்குத் தடயங்கள் கிடைத்தன."

நான் சரித்திர ஆராய்ச்சி மாணவனாதலால் எனக்கு அந்த விவரங்கள் மிகவும் சுவாரஸ்யமாக இருந்தன.

"நீங்கள் இந்தியாவைப் பற்றித் தான் தெரிந்து கொள்ளவில்லை. நல்ல வேளையாக உங்கள் தேசத்தைப்பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறீர்களே. எனக்கு அளவிலாத சந்தோஷமாக இருக்கிறது!" என்றேன்.

"இந்த இடத்திலிருந்து பார்த்தால் பழைய காலத்தில் கேம்பிரிட்ஜ் நகரம் எப்படியிருந்திருக்கும் என்று கற்பனை செய்து கொள்ள முடிகிறதல்லவா?"

நான் நகரத்தைப் பார்த்தேன். வரிசை வரிசையாகக் கம்பீரமான கல்லூரிக் கட்டடங்களும், ஒவ்வொரு கல்லூரியிலுமுள்ள தெய்வீகமான தேவாலயக் கட்டடங்களும் மிக அழகாகக் காட்சியளித்தன. இளவேனிற் காலத்தின் கடைசியாதலால் எங்கும் ஒரே புஷ்பமயமாகக் காட்சியளித்தது. மொட்டையாக நின்ற மரங்களிலெல்லாம் பசுமையான இலைகள் அடர்ந்திருந்தன.

நாங்கள் ஏறி நின்ற குன்றிலும் ஒரே புஷ்ப மயமாக இருந்தது. 'இங்கே மிரியத்துக்குப் பதில் இந்து இருந்தால்' என்ற எண்ணம் என் நெஞ்சில் எழுந்தது. அதை நான் அமுக்கப் பார்த்தேன். நான் அமுக்க அமுக்க அதன் வேகம் அதிகமாயிற்று.

"என்ன ஒரேயடியாகச் சிந்தனையில் ஆழ்ந்து விட்டீர்கள்?" என்று மிரியம் என் சிந்தனையைக் கலைத்தாள்.

"பழைய காலத்தில் இந்த நகரம் எப்படியிருக்குமென்று கற்பனை செய்து பார்த்துக் கொண்டிருந்தேன்" என்று மழுப்பினேன்.

மிரியம் சிரித்து விட்டு, "அதை நான் நம்பவில்லை" என்றாள்.

"மணியாகி விட்டது. போவோமா?" என்று கேட்டுக் கொண்டே எழுந்தேன்.

"என்ன அவசரம் மிஸ்டர் ராய்?"

"இப்படி நான் உட்கார்ந்து கனவும் கற்பனையும் கண்டு கொண்டிருந்தால் என் பரீட்சையின் கதி என்ன ஆவது? நேரம் பறக்கிறது மிஸ். மிரியம்" என்று புறப்பட்டேன்.

நான் கேம்பிரிட்ஜ் போய்ச் சேர்ந்த சில நாட்களுக்கெல்லாம் ஒரு காரியம் செய்தேன். குங்குமத்துறையில் ஒருநாள் தங்கபாண்டியனுடைய காமிராவை எடுத்துக் கொண்டு இந்துவின் வீட்டுக்குப் போனேனல்லவா? அன்று இந்துவைச் சில படங்கள் எடுத்தேன். அவற்றை நான் சீமை செல்லும் அவசரத்தில் 'டெவலப்' செய்ய முடியவில்லை. ஒரு நாள் இதைக் குறித்து ஸ்ரீமதி ஹார்வியிடம் கூறியபோது, தானே அதைச் செய்து தருவதாகக் கூறி வாங்கிக் கொண்டார்.

ஸ்ரீமதி ஹார்வி ஒரு வாரத்திற்கெல்லாம் அவற்றைக் கொண்டு வந்தார். பிறகு, "நான் பார்க்கலாமா?" என்று கேட்டார்.

எனக்கு ஒரே கூச்சமாக இருந்தது. ஆயினும் மாட்டேனென்று எப்படிச் சொல்ல முடியும்? "பாருங்களேன்" என்று கூறி விட்டுக் 'கவரி'லிருந்து ஒவ்வொரு படமாக எடுத்தேன். (தொடரும்)




இரவு மணி இரண்டிருக்கும். மழை சோ வென்று கொட்டிக் கொண்டிருந்தது. கணத்துக் கொருமுறை கண்ணைப் பறிக்கும் மின்னல். கடகடத்த இடியின் அதிர்ச்சியில் கயா ஜங்ஷன் பிளாட்பாரத்திலிருந்த மின்சார விளக்குகள் பொட்டென்று அணைந்து போயின.

கோமதிநாயகம் பனாரஸ் பாஸஞ்சர் வண்டிக்காகக் காத்துக் கொண்டிருந்தான். வண்டி வர இன்னும் ஒன்றரை மணி நேரமிருந்தது. பிளாட்பாரத்தில் அவனைத் தவிர வேறு பிரயாணிகளே இல்லை. வெளியே இயற்கையில் காணப்பட்ட அமளி அவனது உள்ளக் கிளர்ச்சியின் பிரதிபலிப்பைப் போலிருந்தது.

அவன் யாத்திரைக்காகக் கிளம்பிச் சுமார் ஒரு மாதத்துக்கு மேலிருக்கும். இதுவரையில் எத்தனையோ புண்ணிய ஸ்தலங்களைத் தரிசித்தாகிவிட்டது. ஆனால் புத்த பகவானுக்குச் சாந்தி நல்கிய புத்தகயாவிலும் கூட அவனது மனத்துக்கு அமைதி கிடைக்கவில்லை. அஞ்சலை அவனுக்கு இழைத்த துரோகத்தை எண்ணியெண்ணி அவன் மனம் சதா பொருமிக் கொண்டேயிருந்தது.

சென்ற வருடம் இதே சமயத்தில் ஜீவனத்தை நாடி அவன் சிங்கப்பூருக்குக் கிளம்பிய சமயத்தில் அஞ்சலை அவனது பிரிவுக்காக எத்தனை வருந்தினாள்! இடுப்பில் குழந்தையுடன் அவள் கண்ணீரும் கம்பலையுமாகப் பிரியா விடை கொடுத்த காட்சி இன்னும் அவனது கண்ணெதிரே நின்றது. "உங்களைப் பிரிந்து நான் தனியே எப்படி வாழ்வேன்!" என்று நெஞ்சுருக அவள் கேட்டபோது அவன் மனம் புழுவெனத் துடித்தது. மிகுந்த பிரயாசையுடன் அவளைச் சமாதானப் படுத்தி, "எப்படியும் ஒரு வருஷத்துக்குள் சிறிது பணம் சேகரித்துக் கொண்டு வந்து உன்னையும் குழந்தையையும் அழைத்துச் செல்கிறேன்" என்று கூறி விட்டுச் சென்றான்.

சிங்கப்பூருக்குச் சென்ற பிறகு சுமார் பத்து மாதங்கள் வரை அஞ்சலையிடமிருந்து தவறாமல் கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு கடிதத்திலும் 'எப்போதும் உங்கள் நினைவாகவே இருக்கிறது', 'உங்கள் அன்பான வரவை எதிர்நோக்கி நடைப் பிணம்போல் வாழ்கிறேன்' என்றெல்லாம் அவள் எழுதியிருந்ததைக் கண்ட அவன், அந்தக் கடிதங்களையெல்லாம் கண்ணீரால் நனைத்தான்.

பதினோராவது மாதத்தில் இன்று வரும், நாளை வரும் என்று அவளது கடிதத்தை எதிர்பார்த்து ஏமாந்தான் அவன். அவனது கடிதத்துக்குப் பதிலாகப் பேரிடி போன்ற அந்த அநாமதேயக் கடிதம் வந்தது. அஞ்சலையின் நடத்தைக்குக் களங்கம் கற்பித்து, அவனை நையாண்டி செய்து எழுதப்பட்டிருந்த அக் கடிதம் அவன் மனத்தை ஒரு கலக்குக் கலக்கி விட்டது!... ஆனால்......அவனது ஆருயிர் அஞ்சலை ஒருநாளும் அப்படிப்பட்டவளல்ல என்றுதான் கூறியது மனச்சாட்சி. ஊரில் அவனுக்கு ஆகாதவர்கள் எத்தனையோ பேர்! அப்படியானால் ஒரு மாத காலமாக அவளிடமிருந்து கடிதமே வராததற்குக் காரணம்!... மனம் பலப்பல எண்ணியது. சந்தேகத்தின் வித்து இலேசாக ஊன்றியது.

வயிற்றைக் கட்டி அரும்பாடு பட்டுச் சேர்த்து வைத்திருந்த இரண்டாயிரம் வெள்ளிகளுடன் அவன் தாய்நாட்டை நோக்கிப் புறப்பட்டு விட்டான்.

அன்று ரயிலை விட்டிறங்கியபோது இரவு பதினொரு மணி. ஊருக்கும் ஸ்டேஷனுக்கும் மூன்று மைல். கால் நடையாகவே சென்றான். படபடக்கும் இருதயத்துடன் வீட்டை நெருங்கியவன் சற்றுத் தொலைவிலிருந்தே கவனித்தான். ஜன்னலிலிருந்து விளக்கொளி தெரிந்தது. ஊரே அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த சமயத்தில் அவன் வீட்டில் ஆள் நடமாட்டம்! மேற்கொண்டு முன் செல்லக் கால் எழவில்லை.

திடீரென்று வாசற் கதவு திறக்கப்பட்டது. அவன் திடுக்கிட்டான். நெட்டையான ஒரு ஆசாமி வெளியே வந்தான். மீண்டும் கதவு தாளிடப்பட்டது. வெளியே வந்தவன் அவன் நின்றிருந்த திசைக்கு எதிர்த் திசையை நோக்கி நடந்தான். அவனது கையில் ஏதோ ஒரு சிறு மூட்டை இருந்தது போல் தோன்றியது.

அவனது உள்ளத்தில் புயல் வீசியது. கடைசியில் அவன் வைத்த நம்பிக்கை யெல்லாம் வீண்! கட்டிய கோட்டை யெல்லாம் வியர்த்தம்! அந்த அநாமதேயக் கடிதத்தில் கண்ட விஷயம் உண்மைதான்! அவன்

உயிருக்குயிராக நேசித்த அஞ்சலை அவனுக்குத் துரோகம் செய்து விட்டாள்! அவனுக்கு வந்த ஆத்திரத்தில் ஓடிப் போய் அவளைக் குத்திக் கொலை செய்திருப்பான். ஆனால் ஆதியிலிருந்து அவனது ரத்தத்தில் ஊறியிருந்த நற்பண்புகள் அவனை அத்தகைய பாபச் செயலிலிருந்து காப்பாற்றின. அவன் வந்த வழியே திரும்பினான்.

கடந்த ஒரு மாத காலமாக க்ஷேத்திராடனம் செய்கிறான். என்ன முயன்றும் அவன் மன அதிர்ச்சி தணியவில்லை.

## 2

கோமதி நாயகத்தின் சிந்தனை சிதைவுற்றது. பிளாட்பாரத்தின் மறுமுனையிலிருந்து அவனை நோக்கி யாரோ வருவது போலிருந்தது. வந்தவன் ஒரு நீண்ட போர்வையால் உடம்பைப் போர்த்திக் கொண்டிருந்தான். உடை முழுவதும் நனைந்திருந்தது. அருகில் வந்ததும் கரகரப்பான தொண்டையில், "பனாரஸ் பாஸஞ்சர் எப்போது வரும்!" என்று கேட்டான்.

"இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது" என்று பதிலளித்தான் கோமதிநாயகம்.

வந்தவன் 'உஸ்' என்ற பெருமூச்சுடன் அவன் அருகில் உட்கார்ந்து ஒரு பீடியைப் பற்ற வைத்தான். நெருப்புக் குச்சியின் மங்கிய ஒளியில் தாடியும் மீசையும் காடு போல் மண்டிக் கிடந்த அந்த முகம் பயங்கரமாகக் காட்சியளித்தது. நெடுந் தூரம் நடந்து வந்து களைத்தவனைப் போல் காணப்பட்டான் அவன்.

"வெகு தூரத்திலிருந்து வருகிறீரோ!" என்று வினவினான் கோமதிநாயகம்.

"ஆம். காலையிலிருந்து சுமார் முப்பத்தைந்து மைல் நடந்து விட்டேன். ஜெயிலை விட்டதும் சங்காபுரிக்குப் போய் அங்கிருந்து நேராக இப்போதுதான் வருகிறேன். ஒரு நிமிஷம் கூட ஓய்ச்சல் இல்லை!"

"ஜெயிலா!"

"ஆமாம்! ஏழு வருடக் கடுங்காவலுக்குப் பிறகு இன்றுதான் விடுதலையடைந்தேன்!"

"ஏழு வருடமா!"

அவன் ஒரு வறட்டுச் சிரிப்புச் சிரித்தான். "ஏற்கனவே கொள்ளைக்காரன். அதோடு கொலைக் குற்றமும் சேர்ந்து கொண்டால்...!"



கோமதிநாயகத்தின் உள்ளம் அச்சத்தினால் சில்லிட்டது. நிலைமையைச் சமாளிப்பதற்காக அவனிடம் நயமாகப் பேசினான்.

"உலகத்தில் நியாயம் குறைந்து கொண்டு வருகிறது...."

"ஆம், என் விஷயத்திலும் அப்படித்தான். மரண தண்டனை கொடுக்காமல் ஏழு வருஷம் சிறைத் தண்டனை கொடுத்தது நீதிபதி புரிந்த மகத்தான அநியாயம்தான்!"

அவனது விசித்திரமான பதில் கோமதிநாயகத்தின் ஆவலைத் தூண்டி விட்டது. தூண்டிக் கேட்டதன் பேரில் வந்தவன் தன் கதையைக் கூறத் தொடங்கினான்.

## 3

"சங்காபுரியில் என் தந்தைக்கு ஏராளமான சொத்துக்கள் இருந்தன. ஊரில் நல்ல செல்வாக்கு. நான் ஒரே மகன். செல்வமாக வளர்ந்து வந்தேன். என் தந்தைக்கு ஒன்று விட்ட சகோதரன் ஒருவன் அதே ஊரில் வசித்து வந்தான். இரு குடும்பங்களுக்கும் நெடு நாளையப் பகை உள்ளுக்குள் புகைந்து கொண்டிருந்தது. என் தந்தையின் செல்வம் சித்தப்பனின் கண்களை உறுத்திக் கொண்டே இருந்தது.

"அப்போது எனக்குப் பதினறு வயது. பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். ஒரு நாளிரவு நானும் எனது நண்பர்கள் சிலரும் அடுத்த கிராமத்தில் நடந்த நாடகத்துக்குச் சென்றிருந்தோம். அதிகாலையில்தான் திரும்பினோம். ஊரை நெருங்கும் போதே பெருத்த ஆரவாரம் கேட்டது. எங்களது பண்ணையாட்களில் சிலர் ஓடி வந்தார்கள். வாழ்க்கையில் முதன் முதல் பேரிடி போன்ற அதிர்ச்சி உண்டாகியது.

"'தம்பி, ஓடிப் போ. இந்தக் கிராமத்துப் பக்கம் தலை காட்டாதே! நேற்றிரவு உங்களது வீடு கொள்ளையடிக்கப்பட்டது. கொள்ளைக்காரர்கள் உனது தாய் தந்தையரைக் கொன்று வீட்டுக்கும் தீ வைத்து விட்டனர். அத்தனை பெரிய மச்சு வீடும் மாட்டுக் கொட்டிலும் கன்று காலிகளும் இரவோடு இரவாக எரிந்து சாம்பலாயின. அதோ, பார்! ஆகாயத்தில் புகை மண்டலம்! தீயின் தாபம் இன்னும் தணியவில்லை! எல்லாவற்றிற்கும் காரணம் உனது சித்தப்பன்தான். அவனது தூண்டுதலின் பேரில்தான் இது நடந்திருக்கவேண்டும்! நீ கிராமத்துள் போனால் உன்னையும் ஒழித்துக் கட்டி விடுவான், திரும்பிப் போ! திரும்பிப் போய்விடு!' என்றனர்.

"எனக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. மனத்தில் பெருத்த குழப்பமும் பீதியும் பிடித்துக் கொண்டன. கிராமத்தில் காலடி வைக்காமல் அப்படியே திரும்பினேன்.

"டிக்கட் இல்லாமல் ரயில் சவாரி செய்தேன். கண்ட கண்ட இடமெல்லாம் சுற்றினேன், பிச்சை எடுத்தேன், பட்டினி கிடந்தேன், கூலி வேலை செய்தேன், அழுக்கடைந்த கந்தல்களைக் கட்டிக் கொண்டு திரிந்தேன். என் உருவம் அடையாளம் கண்டு கொள்ள முடியாதபடி மாறி விட்டது. நாட்கள், மாதங்கள் வருடங்களெனக் காலம் ஓடியது. நான் இருபது வயதை யடைந்தேன்.

"கிராமத்தை விட்டுப் புறப்பட்ட நான் முதற்கொண்டே மனத்தில் ஒரு தீவிர வைராக்கியம், ஒரு பிரதிக்ஞை! எப்படியும் சித்தப்பனைப் பழிக்குப் பழி வாங்குவதென்று! இந்நிலையில்தான் ஒரு நாள் மொராதாபாதில் கொள்ளைக் கூட்டத் தலைவன் ஒருவனுடன் எனக்கு நட்பு ஏற்பட்டது. அவன் ஊர் ஊராகச் சுற்றித் தன் கூட்டத்துக்கு ஆள் சேர்த்துக் கொண்டிருந்தான். எனது நிலைமையும் உருவமும் அவனை வெகுவாக வசீகரித்தன. நான் எனது வரலாற்றைக் கூறியபோது அவன் ஆச்சரியம் அடைந்தான்.

" 'தம்பி, நான் யாரென்று தெரிந்தால் நீ ஆச்சரியப்பட்டுப் போவாய். கங்காபூரில் அன்று கொள்ளையை நடத்தியது நான்தான். உனது பெற்றோர்களைக் கொலை செய்தது எனது ஆட்கள்தான் !..' என்றான் அவன்.

"எனக்கு வந்த ஆத்திரத்தில் அப்படியே அவனது குரல்வளையை நெரித்துக் கொன்று விடலாமா என்று தோன்றியது.

" 'பதற்றப்படாதே! இதை நானாகச் செய்யவில்லை. அப்படிச் செய்யத் தூண்டியது உனது சித்தப்பன்தான். இந்த வேலைக்காக அவன் எனக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுத்தான். ஆனால் அந்த அயோக்கியன் என்னை மோசம் செய்து விட்டான். பிற்காலத்தில் என்னால் தனக்கு யாதொரு தீங்கும் நேரிட்டு விடக் கூடாதே என்ற பயத்தினால் அவன் போலீஸுக்கு என்னைப் பற்றிய தகவல் கொடுத்து விட்டான். என் ஆட்களில் பதினொரு பேர்கள் பிடிபட்டனர். நால்வருக்கு மரண தண்டனையும் மற்றவர்களுக்கு ஆயுள் தண்டனையும் கிடைத்தன. அவனைப் பழிக்குப் பழி வாங்காமல் விடுவதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டேன். இப்போது சொல்! நீ எனக்கு வலது கையாக இருக்க ஆசைப்படுகிறாயா, இல்லையா!'' என்று கேட்டான். நான் மறுபேச்சின்றி அவனது கூட்டத்தில் சேர்ந்துவிட்டேன்.

"அடுத்த ஆறு மாதத்தில் ஏற்பாடுகள் முடிந்து விட்டன. கங்காபூரில் எனது சித்தப்பன் பெரிய வியாபாரம் நடத்திக் கொண்டிருந்தான். குறிப்பிட்ட தினம் நள்ளிரவில் எங்கள் கூட்டம் சித்தப்பனின் வீட்டைத் தாக்கியது. கொள்ளையடிப்பதோடு விடும்படியும் சித்தப்பனை ஒன்றும் செய்ய வேண்டாம் என்றும் தலைவனிடம் கேட்டுக் கொண்டேன். ஆனால் நடந்தது வேறு விதமாக இருந்தது. வீட்டைத் தீக்கிரையாக்கி, சித்தப்பனைக் குடும்பத்தோடு தீயில் கட்டிப் போட்டுப் பொசுக்கி விட்டான் தலைவன். இதையறிந்து என்னால் வருந்தாமல் இருக்க முடியவில்லை.

"இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு ஒருநாள். அது எனது வாழ்க்கையிலேயே முக்கியமான தினம். பாலைவனத்து யாத்ரீகனுக்குப் பசுஞ்சோலை கிடைத்ததைப் போல எனக்குச் சமேலி கிடைத்தாள். பிரயாகையிலிருந்து திரும்புகையில் சில முரடர்களின் கையிலிருந்து அவளைக் காப்பாற்றினேன். தனக்கு ஒரு அண்ணன் உண்டென்றும் அவன் ஏதோ பெரிய குற்ற வழக்கில் ஈடுபட்டுச் சிறை சென்று விட்டதாகவும், தான் திக்கற்றவள் என்றும் கூறினாள் அவள். அவளது அற்புதமான அழகு என்னை வசீகரித்து விட்டது.



அவளும் என்மீது அன்பு கொண்டாள். என் வாழ்க்கைப் பாதை மாறிவிட்டது.

"நான் கொள்ளைத் தொழிலை விட்டேன். சமேலியுடன் ஒரு குக்கிராமத்தில் இன்ப வாழ்க்கை தொடங்கினேன். எனது பெயரையும் மாற்றி வைத்துக் கொண்டேன். சுமார் இரண்டு ஆண்டுகள் நிம்மதியாகக் கழிந்தன. சமேலி ஒரு ஆண் குழந்தைக்குத் தாயாரானாள்.

"ஒருநாள் மாலை நேரம். பொழுது சாய்ந்து இருள் படர்ந்து கொண்டிருந்தது. அடுத்த நகரத்துக்கு ஒரு வேலையாகச் சென்றிருந்த நான் அப்போதுதான் திரும்பினேன். வழக்கத்துக்கு விரோதமாக விளக்கு வைக்கும் நேரத்தில் வீட்டு வாசற் கதவு தாளிடப்பட்டிருந்தது. உள்ளே ஆண் குரல் கேட்டுத் திடுக்கிட்டு நின்றேன். கதவைத் தடதடவென்று தட்டினேன். பேச்சொலி சட்டென்று நின்றது. ஆத்திரத்தோடு 'கதவைத் திற!' என்று இரைந்து கத்தினேன். பதிலில்லை. அடுத்தகணம் புழக்கடைக் கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது. ஆசாமி பின்புறம் வழியாகத் தப்பி ஓடப்போகிறான் என்று புரிந்துவிட்டது. வீட்டைச் சுற்றிக் கொண்டு ஓடினேன். ஒரு வாலிபன் புழக்கடை வேலியைத் தாண்டிக் குதித்து அப்பாலிருந்த வயல்களினூடே புகுந்து அதி விரைவாக ஓடினான். 'நில், நில்!' என்று கூச்சலிட்டேன். அவன் நிற்கவில்லை. எனக்கு மூளை குழம்பி வெறி பிடித்தது போலாகி விட்டது. தாங்கொணாத சினத்துடன் வீட்டுக்குள் புகுந்தேன். பற்களை நற நற வென்று கடித்துக் கொண்டே, 'யாரடி வந்தவன்!' என்று அதட்டினேன். சமேலி பதில் பேசவில்லை. வாடைக் காற்றில் ஆடும் வேப்பிலையைப் போல் அவளது தேகம் நடுநடுங்கியது.

"எனது சந்தேகம் ஓங்கியது. சமேலி எனக்குத் துரோகம் இழைத்து விட்டாள் என்ற ஒரே நினைவில் உடலின் ஒவ்வொரு அணுவும் பதறியது. என்ன செய்கிறோமென்றே தெரியவில்லை. வலக்கரம் இடையில் செருகியிருந்த கத்தியின் மீது பாய்ந்தது. அடுத்த வினாடி "ஐயோ!'' என்ற கூச்சலுடன் சமேலி தடாலென்று கீழே சாய்ந்தாள். அவளது மார்பிலிருந்து ரத்தம் பீறிட்டது.



நம் தென்னாட்டின் பெருமையை உலகுக்கு எடுத்துக் காட்டுவது நமது திருக்கோயில்கள். திருவிரிஞ்சிபுரம் மார்க்கபந்தீஸ்வரர் ஆலயத்தின் கடை ஞாயிறு மாண்பு விழா வெகு விமரிசையாகச் சமீபத்தில் நடந்தேறியது. பக்தர்களும் அன்பர்களும் திரளாக வந்திருந்து சிறப்பித்தனர்.

"ஆம், என் உயிரினும் மேலான சமேலியை நான் கொலை செய்து விட்டேன். குபீரென்று பாய்ந்த குருதி வெள்ளத்தைக் கண்டு என் வெறி சற்றுத் தணிந்தது. சமேலி திணறினாள். இதே சமயம் வாசற்புறத்தில் காலடிச் சத்தம் கேட்டது. ஐந்தாறு போலீஸ்காரர்கள் திடீரென்று உள்ளே பிரவேசித்தனர். சமேலியின் நிலைமையையும் கீழே கிடந்த கத்தியையும் கண்டதும் அவர்கள் என் மீது பாய்ந்து பிடித்துக் கொண்டனர். நான் திமிறவில்லை.

" 'அவன் எங்கே!' என்று கேட்டனர் போலீஸ்காரர்கள்.

" 'யார்!'

" 'சிறையிலிருந்து தப்பி வந்த கைதியைத் துரத்திக் கொண்டு வந்தோம். அவன் சற்று முன் இந்த வீட்டில் நுழைந்ததைக் கண்டோம்!'

"மரணாவஸ்தையில் கிடந்த சமேலியை நோக்கினேன். அவளது நெற்றி சுருங்கியது. உதடுகள் துடித்தன. திணறிக் கொண்டே மெதுவாக, 'ஆம்......என் அண்ணன்...' என்றாள். எனக்குப் பகீரென்றது.

"தொட்டிலிலிருந்த குழந்தை தன் குஞ்சுக் கைகளை ஆட்டி ஏனோ சிரித்தது.

" 'சமேலி! வந்தது உன் அண்ணனா!'

"அவளது கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகியது.

"நான் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகப்பட்டேன். சமேலி அன்றிரவு ஆஸ்பத்திரியில் மரணமடைந்தாள். எனது வாழ்க்கையின் ஜோதியை எனது கரங்களாலேயே அணைத்து விட்டேன். எனக்கு மன்னிப்புக் கிடையாது. நான் கோரியதெல்லாம் மரணம் தான். வழக்கு நடந்தது. உயிரின் மீது ஆசை இருந்தால் அல்லவா விஷயத்தை மறைக்க வேண்டும்! என் உண்மைப் பெயரையும் கதையையும் ஆதியோடந்தமாக ஒப்புவித்து விட்டேன். மரண தண்டனை விதிக்கப்படும் என்று ஆவலோடு எதிர்பார்த்தேன். ஆனால் ஆத்திரத்தின் விளைவு என்று தீர்மானித்து ஏழு வருடம் கடுங்காவல் தண்டனை அளித்தனர்." கதையை நிறுத்திச் சற்று மூச்சு வாங்கிக் கொண்டான் அம்மனிதன்.

"பிறகு!" என்றான் கோமதிநாயகம்.

"பிறகு என்ன, இன்று காலையில்தான் விடுதலையடைந்தேன். குழந்தையைக் காணும் ஆவலில் கங்காபூருக்குச் சென்றேன். அவன் காசியிலுள்ள ஒரு அநாதை விடுதியில் வளர்வதாகத் தகவல் கிடைத்தது. இப்போது அங்கே தான் போகிறேன்!"

கோமதிநாயகம் பெருமூச்சு விட்டான். அவனது மனத்தில் ஒரு பெருத்த போராட்டம் உதயமாகியது. இடுப்பில் குழந்தையுடன் கண்ணீரும் கம்பலையுமாகப் பேதை அஞ்சலையின் உருவம் அவன் கண் முன்னே தோன்றியது. "நீ துரோகி! ஒரு பாவமும் அறியாத அஞ்சலையைத் தவிக்கவிட்டு ஊர் சுற்றுகிறாய்!" என்று இடித்துரைத்தது அவனது மனச்சாட்சி.

தூரத்தில் பாஸஞ்சர் வண்டியின் தலை விளக்கு பளிச்சிட்டது. கூட இருந்த மனிதன் கருட்டிவாரிக் கொண்டு எழுந்தான். வண்டி வந்து பிளாட்பாரத்தில் நின்றதும் அம் மனிதன் அவசரமாக அதில் ஏறிக் கொண்டான்.

கோமதிநாயகமும் எழுந்தான். ஆனால் வண்டியில் ஏறவில்லை. பிளாட்பாரத்தை விட்டு வெளியே வந்து, டிக்கட் கொடுக்குமிடத்தை அடைந்து, "சென்னைப் பக்கத்துக்கு எப்போது வண்டி!" என்று விசாரித்தான்.

## 4

**நா**ன்கு தினங்கள் கழித்துத் தன்னுடைய கிராமத்தை யடைந்ததும் முன்போல் எங்கும் தயங்காமல் வீட்டுக்குள் நுழைந்தான் கோமதிநாயகம். கூடத்தில் அவன் கண்ட காட்சி அவனைப் பிரமிப்பில் ஆழ்த்தியது. அஞ்சலை படுக்கையில் ஸ்மரணையற்றுக் கிடந்தாள். அவளது உடம்பு அடையாளம் கண்டுபிடிக்க முடியாதபடி துரும்பாக இளைத்துப் போயிருந்தது. அருகே உட்கார்ந்திருந்த பக்கத்து வீட்டுக் கிழவி அவனைக் கண்டதும், "வந்து விட்டாயா, தம்பி! இனிமேல் பயமில்லை! அஞ்சலை பிழைத்து எழுந்துவிடுவாள்! இரண்டு மாதமாகக் காய்ச்சல்! படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள். எப்போதும் உன் நினைவுதான் அவளுக்கு. போன மாதத்தில் ஒரு நாள் ராத்திரி நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. பாதி ராத்திரிக்கு என் மகனை ஓடச் சொல்லிப் பக்கத்து ஊர் வைத்தியரை அழைத்து வரச் சொன்னேன்...மறு நாள் உனக்குக் கூட ஒரு கடிதம் எழுதச் சொன்னேன்...இதோ, வைத்தியர் கூட வந்து விட்டார்!" என்றாள்.

சுமார் முப்பத்தைந்து வயதுள்ள ஒரு உயரமான மனிதன் சென்ற மாதம் கையில் ஒரு சிறு மூட்டையுடன் உள்ளே நுழைந்து, பிறகு வெளியே வந்த காட்சி ஒரு கணம் அவனது மனக்கண் முன் தோன்றி மறைந்தது. அஞ்சலை மெதுவாகக் கண்களைத் திறந்தாள். அவனைக் கண்டதும் அவளது வெளிறிய முகம் பிரகாச மடைந்தது.

ஒன்றரை மாத காலமாக அவனது மனத்தில் வீசிக் கொண்டிருந்த புயல் ஓய்ந்து விட்டது. அமைதியை இங்கே விட்டு எங்கெல்லாம் அதைத் தேடி அலைந்தோம் என்று எண்ணினான் அவன்!

டூமெக்ஸ்

பால் உணவு



குழந்தைகளுக்கு டூமெக்ஸ் புகட்டி அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்!

கூந்தல் சீப்போடு வருவதைவிட
தலையிலேயே இருப்பது மேல்.



# கேசவர்த்தினி யினால்

மயிர் உதிர்வதை நிறுத்துங்கள். வியாதியாலும், பிரசவத்தாலும் இழந்த ஜீவ தைலங்களுக்குப் பதிலாக கூந்தலை கேசவர்த்தினி கொண்டு போஷியுங்கள். தலைஅரிப்பை நிறுத்துங்கள். பொடுகை ஒழியுங்கள். அகால நரையைத் தடுங்கள். நரையையும் தள்ளி வையுங்கள்.




**கேசவர்த்தினியினால்**
**கூந்தல் புத்துயிருடன் விளங்கட்டும்**

**கேசவர்த்தினி ஷாம்புவினால் தலை சுத்தமாயும், பரிமளமுள்ளதாயும் ஆகட்டும்**

---

*கேசவர்த்தினி அணா 14. ஷாம்பு அணா 14. தபால்செலவு வேறு. எங்கும் கிடைக்கும்.*

No. 1 **கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ், கோயமுத்தூர்**








# SCISSORS

# மந்திரி அய்யன்

கி.ரா. கோபாலன்

இரண்டு மூன்று நாட்களாக ஊரில் ஒரு வதந்தி. ஊரிலுள்ள ராமர் கோவிலைப் புதுப்பித்துக் கல்யாண மண்டபம் கட்டிப் பிராகாரச் சுவரில் ராமாயணத்தைச் சித்திர ரூபமாக எழுதும்படி அச்சுத நாயக்கர் கட்டளை யிட்டிருக்கிறார். அந்தப் பணியை நிறைவேற்றக் குடந்தைக்கு மந்திரி விஜயம் செய்திருக்கிறார் என்றும் கூறிக்கொண்டார்கள்.

சோழ வள நாட்டில் மக்களுக்கு எதிலும் எவ்விதக் குறையுமில்லை. மக்களுக்குள்ள குறைகளை நிவர்த்திப்பதற்காக, ஏதாவது செய்ய வேண்டுமே என்ற கவலை அரசருக்கோ அமைச்சருக்கோ ஏற்பட்டதே இல்லை. காரணம், குறைவற்ற மனத்தோடு பெரு வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தார்கள் மக்கள். அவர்கள் பக்திப் பெருக்கினால் இறைவனுக்கு ஏதேனும் செய்ய வேண்டும் என்ற கருத்துடையவர்களாக இருந்தனர். மக்களின் மனத்தையே கொண்டிருந்தார்கள் அச்சுத நாயக்க மன்னரும் அமைச்சரும்.

தம் வீட்டில் பணி புரிந்த ஒரு சேவகனைச் சோழ நாட்டின் அதிபதியாக்கி, அவனிடமே தாம் மந்திரியாக அமைந்த மேதையை இரண்டாவது சாணக்கியன் என்று சொல்வதில் என்ன தவறு! அரசனையே சிருஷ்டித்து ஒரு நாட்டைத் திறம்பட நிர்வாகம் செய்யும் ஒரு மந்திரிக்கு நாட்டில் எவ்விதக் கௌரவம் இருக்கும் என்று நாம் சொல்ல வேண்டுமா! மந்திரி கோவிந்த தீக்ஷிதர் நாட்டில் தெய்வமாகக் கொண்டாடப் பட்டார். அவர்தான் குல மந்திரி; அவர்தான் குலகுரு.

அரசர் அச்சுத நாயக்கர் தீவிர வைஷ்ணவர். அமைச்சர் கோவிந்த தீக்ஷிதரோ தீவிர சைவர். விஷ்ணு பக்தி கொண்ட அரசர் எங்கும் திருமாலுக்குக் கோயில் கட்டினார். சிவ பக்தராகிய அமைச்சர் எங்கும் பரமேசுவரனுக்குக் கோயில் எழுப்பினர். அரசாங்க பொக்கிஷத்தில் இருந்து தம் இச்சையாக அமைச்சர் செல்வத்தை எடுத்துச் சிவாலயத் திருப்பணி செய்வதை மன்னர் தடுப்பதில்லை. அவரால் தடுக்கவும் முடியவில்லை. எப்படித் தடுக்க முடியும்! தம் குலத்தையே அரச குலமாக்கி வைத்த தெய்விக சக்தி நிறைந்த மகா புருஷருக்கு எதிராக என்ன செய்ய முடியும்! அரசரும் அமைச்சரும் மதக் கொள்கைகளில் வெவ்வேறாக இருந்தாலும் உயிர் ஒன்றாகத்தான் இருந்தனர். அரசரும் அமைச்சரும் எவ்வளவு ஒற்றுமையாக இருந்தார்களோ, அப்படித்தான் சோழவள நாட்டில் சைவமும் வைஷ்ணவமும் வளர்ந்தோங்கி தெய்விக மணத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. கோயில் திருப்பணி மந்திரி கோவிந்த தீக்ஷிதரின் மேற் பார்வையிலேயே நடக்க வேண்டுமென்பது அரசர் அச்சுத நாயக்கரின் ஆசை. மந்திரி தீவிர சிவபக்தரானாலும் பொழுதிலும், வட மொழியில் சிறந்த பாண்டித்தியமுடையவரானதால் வால்மீகி ராமாயணத்தைப் படித்துப் படித்து மனமுருகி ராமனிடம் எல்லையற்ற பக்தி கொண்டவர். அரசரைவிட அவருக்கு ராமனுக்குத் திருப்பணி செய்வதில் அதிக ஆர்வம் இருந்தது. அதனால் அவரே நேரில் திருக் குடந்தைக்கு விஜயம் செய்திருந்தார்.

அமைச்சரானவர் அரசரின் ஆசையை மட்டும் நிறைவேற்றிக் கொண்டு போனால் ஆயிற்றா! நகர மக்களின் அபிப்பிராயத்தையும் தெரிந்து கொள்ள வேண்டுமல்லவா! இறைவன் திருப்பணி விஷயத்தில் மக்கள் எவ்வித ஆட்சேபணையும் தெரிவித்ததில்லைதான். இருந்தாலும் அதற்காக அரசரும் அமைச்சருமாகச் சேர்ந்து எங்குமே கோயில்களாக நிர்மாணித்துக் கொண்டு போவதா! மக்களுக்கு வேறு ஏதேனும் குறை இருந்தால்! மந்திரி கோவிந்த தீக்ஷிதர் மக்கள் மனத்தை அறிந்து கொள்ளாமல் எக் காரியத்திலும் ஈடுபட மாட்டார்.



மந்திரி அய்யனும், அவர் மனைவியும்

எனவே, குடந்தை வந்ததும் ஸ்ரீராமர் கோயில் திருப்பணியைப் பற்றி மக்களிடையே வதந்தியைக் கிளப்பி விட்டு உளவாளிகள் மூலம் மக்களின் மனத்தை நன்கு அறிந்து வரச் செய்தார்.

அரசரைவிட மந்திரியிடம்தான் மக்கள் அதிக மரியாதையும் பக்தியும் செலுத்தினார்கள். தஞ்சை நாயக்கர் ராஜ சபையில் அரசருக்கும் அமைச்சருக்கும் ஒரே மாதிரியான சிம்மாசனம். அமைச்சர் அரசரை 'அய்யன்' என்ற மரியாதை நிறைந்த சொற்களால் அழைப்பார். அரசரும் மந்திரியை 'அய்யன்' என்றே அழைப்பார். மக்கள் அரசரையும் அமைச்சரையும் 'அய்யன்' என்றுதான் குறிப்பிடுவார்கள்.

அரசரிடமும் அமைச்சரிடமும் எல்லையற்ற பிரீதி வைத்திருந்த நாட்டு மக்கள் 'அய்யன் பேட்டை, அய்யன் தெரு, அய்யன் கடை, அய்யன் வாய்க்கால், அய்யன் குளம்' என்றெல்லாம் பெயர் வைத்தார்களானால் அது அரசரையும் அமைச்சரையும் குறிக்குமே தவிர ஒருவரை மாத்திரம் தனியாகக் குறிப்பதாகாது. இத்தகைய பெருமை பொருந்திய மந்திரி 'அய்யன்' குடந்தைக்கு வந்திருக்கும் செய்தியையும், காரியத்தையும் அறிந்த மக்கள் சிறிது பரபரப்பை யடைந்திருக்க மாட்டார்களா!

ராம கைங்கர்யத்தில் மக்கள் எல்லோருக்கும் ஆர்வமும், ஆசையும் இருந்ததே தவிர எவரும் எதிர்ப்புக் காட்டியதாகத் தெரியவில்லை. மந்திரி அய்யனின் மனமும் ஆறுதல் அடைந்தது. சந்தோஷத்தோடு திருப்பணிக்கு முன் ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினார்.



* * *

மாலை நேரம். சந்தியாவந்தனம் முதலிய நியமானுஷ்டானங்களைச் செய்து முடிப்பதற்காக மகாமகக் குளக்கரைக்கு ஒரு வைதிகப் பிராமணர் வந்தார். மகாமகக் குளம் புராதனமான புண்ணியதீர்த்தம். அதன் கரைகள் என்று கட்டப்பட்டதோ! நாலு புறமும் இடிந்து கேவலமான நிலையை அடைந்திருந்தது.

வயதான அந்தப் பிராமணர் மிகவும் ஜாக்கிரதையாகவே ஒவ்வொரு படியாகப் பிடித்துக் கொண்டு இறங்கினார். அவர் எவ்வளவுதான் ஜாக்கிரதையாக இறங்கினாலும் குளத்தின் கடைசிப் படி அவரை ஏமாற்றி விட்டது. அந்தப் படியில் ஒரு சிறு கல் பெயர்ந்திருந்தது. அவர் கால் வைத்ததும், தண்ணீருக்குள் இருந்த அந்தக் கல் நகரவே அவருடைய கால் நிலைக்காமல் சரிந்தது. நல்ல வேளை! அவர் சட்டென்று குனிந்து மேல் படியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு குளத்தில் விழாமல் தப்பினார். அந்தச் சமயத்தில் நடுத்தர வயதான பிராமணர் ஒருவர் சந்தியாவந்தனம் செய்வதற்காகப் படித்துறையில் அலட்சியமாக இறங்கிக் கொண்டிருந்தார்.

வயோதிகப் பிராமணர் அவரை நோக்கி எச்சரிக்கை செய்தார். "அப்பா, குழந்தை! ஜாக்கிரதை! நான் இப்பொழுதுதான் விழத் தெரிந்தேன்" என்றார்.

சற்று நேரம் அந்த வாலிபரை உற்றுப் பார்த்துவிட்டு மீண்டும் சொன்னார்: "உன்னைப் பார்த்தால் நல்ல தேஜஸாகவும், நல்ல குலத்தில் பிறந்து நிறையப் படித்தவனாகவும் தெரிகிறது. இந்தக் குளத்தின் நான்கு கரையையும் கொஞ்சம் பார். அடுத்த வருடம் மகாமகம் வேறு வரப் போகிறது. நாட்டிலே பிரஜைகளுக்கு எந்தக் குறையுமில்லை. தார்மீக மேதையுள்ள ராஜா, சமுத்திரமாகப் படித்த புத்திசாலி மந்திரி வேறு. ஜனங்களுக்கு ஏதாவது நல்லது செய்து கொண்டே இருக்க வேண்டுமென்ற கவலைதான் அவர்களுக்கு. ஆனால் என்ன செய்வது! அவர்களுக்கு உள்ள பக்தியிலும் ஆர்வத்திலும் எதை முன்னால் செய்ய வேண்டும், எதைப் பின்னால் செய்ய வேண்டும் என்று யோசிக்காமல் செய்வது தான் பெரிய குறை. ராம கைங்கரியத்தில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள். 'ராமனுக்குக் கோயில் திருப்பணி செய்து விட்டால் இது ராம ராஜ்யமாகி விடுமா! அந்தத் தயாள மூர்த்தி ராமனையே கேட்டால் சொல்லுவான்: 'எனக்கு ஒரு குறையுமில்லை. ஜனங்களின் அவசியமான குறையை முதலில் நிவர்த்தி செய். அதுதான் எனக்கு சந்தோஷம் என்று. மந்திரி 'அய்யன்' இந்த ஊருக்கு வந்திருக்கிறார் என்று கேள்வி. அந்த மகா புருஷன் கண்ணில் இந்தக் குளம் படாததுதான் துரதிர்ஷ்டம்" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டுக் கொண்டே தமது நித்ய கர்மானுஷ்டானங்களைச் செய்யச் சித்தமானார்.

"அய்யன் கண்ணில் இது படாமல் இருக்காது. இந்தப் பெருங் குறையை அவர் அப்படியே விட்டு வைக்க மாட்டார். கவலைப் படாதீர்கள்" என்று கூறிவிட்டு அந்த நடுத்தர வயதையுடையவர் இறங்கிக் கர்மானுஷ்டானங்களில் ஈடுபட்டார்.

இந்த நடுத்தர வாலிபர்தான் மந்திரி 'அய்ய'னென்று கிழவருக்கு எங்கே தெரியப்போகிறது!

* * *

ஸ்ரீ ராமர் கோயில் திருப்பணிக்காக வந்த தளவாட சாமான்களெல்லாம் திடீரென்று பிறந்த மந்திரி 'அய்ய'னின் அவசர உத்தரவு காரணமாக மகாமகக் குளக்கரைக்குத் திருப்பப் பட்டன. நகர ஜனங்களுக்கு இது பரபரப்பையும் வியப்பையும் உண்டாக்கியது. ராமர் கோயில் திருப்பணி செய்ய வந்த 'அய்யன்' திடீரென்று மகாமகக் குளக்கரையைக் கட்டத் தொடங்கியது எல்லோருக்கும் வியப்பைத் தானே உண்டாக்கும்! ஆனால் மகாமகக் குளம் இருந்த நிலையையும், அடுத்த வருடம் மகாமகம்




வரப்போகிறது என்பதையும் உணர்ந்த ஜனங்கள் மந்திரி செய்த முடிவைத் தவறாகக் கருதவில்லை. அவருடைய சமயோசித புத்தியிலும், நல்ல எண்ணத்திலும் ஜனங்கள் வைத்திருந்த மதிப்புத்தான் அதிகமாகியது.

தஞ்சையிலிருந்த மன்னர் அச்சுத நாயக்கருக்கு இந்தச் செய்தி எட்டியது. ராமஸ்வாமி கோயில் திருப்பணி செய்வதற்காகக் குடந்தைக்குச் சென்ற மந்திரி தம்மைக் கேட்காமல் தம் உத்தரவை மீறி மகாமகக் குளத்துக்குக் கரை யெழுப்பத் துணிந்தது சிறிது ஆத்திரத்தைத் தான் உண்டாக்கியது. அமைச்சர் தம்மை அவமதித்ததாக அரசர் கருதவில்லை. தமக்குள்ள ராம பக்தியையும் ராமனையுமே சைவராகிய மந்திரி கோவிந்த தீக்ஷிதர் அவமதித்து விட்டதாக எண்ணிக் குமுறினர்.

மூன்று மாதத்தில் சங்கு போன்ற வடிவமாய் அமைந்த மகாமகக் குளத்தின் நான்கு புறமும் படிகள் அமைக்கப்பட்டுக் கரைகள் கட்டப்பட்டன. மந்திரி 'அய்ய' னுக்கு ஒரு ஆசை; குளத்தைச் சுற்றிலும் பதினாறு சிறு கோயில்களைக் கட்டி அதில் பதினாறு லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்று. அவர் விருப்பம், அவர் ஆவல் நிறைவேற வேண்டுமானால் இன்னும் ஏராளமான திரவியம் வேண்டும். கையில் இருந்த பொருளெல்லாம் தீர்ந்துவிட்டது. மறுபடியும் தஞ்சை அரண்மனையிலிருந்து பொருள் கொண்டு வரும்படி ஒரு தூதனை அனுப்பி வைத்தார் மந்திரி.

தமது அபிப்பிராயத்தைக் கேட்காமல் மந்திரி அக் காரியத்தில் இறங்கியதே மன்னருக்குப் பிடிக்கவில்லை; மேலும் பணத்துக்காகத் தூதுவனை அனுப்பியது பெருங் கோபத்தை உண்டாக்கியது. மகாமகக் குளம் கட்டுவதற்குச் செப்பாலடித்த காசு கூடக் கிடையாது என்று சொல்லித் தூதுவனைத் திருப்பி அனுப்பி விட்டார்.

அரசர் கோபத்தில் 'பணம் இல்லை' என்று கூறித் தூதுவனை அனுப்பினரே தவிர அவர் மனத்தில் சிறிதும் நிம்மதியில்லை. எப்படி இருக்கும்!

அச்சுத நாயக்கரின் தந்தையான சேவப்ப நாயக்கர் இறக்கும் தறுவாயில், "குல மந்திரியாகிய கோவிந்த தீக்ஷிதரின் அபிப்பிராயத்துக்கு விரோதமாக எதுவும் செய்யாதே, அவரை எப்பொழுதும் தெய்வமாகக் கருது!" என்று அச்சுத நாயக்கரிடம் சொன்னதோடு மட்டும் அல்ல; தமக்குப் பின் அரசனாகப் போகும் அச்சுதனை ரக்ஷிக்கும்படி மந்திரி 'அய்ய' னிடமும் வேண்டிக் கொண்டார்.

ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையே ஒரு கொடிப் பொழுதில் ஏற்படுத்தவும், அழித்து விடவும் சக்தியுள்ள மந்திரி 'அய்ய'னிடம் விரோதம் பாராட்டினால் என்ன நேருமோ என்ற பெரும் திகில் அரசரை வாட்டத் தொடங்கிவிட்டது. மனப் போராட்டத்தோடும் திகிலோடும் அரண்மனையில் அவரால் தரித்திருக்க முடியவில்லை. திடீரென்று தம் பரிவாரங்களோடு கும்பகோணத்துக்குக் கிளம்பினர்.

அரசரிடம் பணத்துக்காகச் சென்ற தூதன் திரும்பி வந்து அரசர் பணம் கொடுக்க இஷ்டப்படாததைச் சொன்னான். இதைக் கேட்டதும் மந்திரி 'அய்யன்' பரிகாசமாகச் சிரித்துக் கொண்டாரே தவிர, பதட்டம் அடையவில்லை. அவருடைய அமைதியான சிரிப்பு அரசரின் மனநிலையை ஓரளவு அறிந்து கொண்டதற்கு அறிகுறியாகத் தோன்றியது. மறு நாள் காலையில் தாமே தஞ்சைக்குப் போகப் போவதாகச் சொல்லிப் பிரயாண ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னர்.

மந்திரி 'அய்யன்' தஞ்சைக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் போது, ஒரு குதிரை வீரன் வந்து அரசர் மந்திரியைப் பார்ப்பதற்காகக் கும்பகோணம் வந்து கொண்டிருப்பதாகத் தகவல் கொடுத்தான்.

மந்திரி 'அய்யன்' குளக்கரைப் படிக்கட்டில் உட்கார்ந்திருந்தார். அரசர் வருவது கண்டு முகமலர்ச்சியோடு வரவேற்றார். அரசர் மந்திரிக்குச் சமீபமாக வந்து உட்கார்ந்திருந்தார். மந்திரி 'அய்யன்' பேச ஆரம்பித்தார். "அய்யனே! குளக்கரையெல்லாம் சரியாகத் தானே கட்டப்பட்டிருக்கிறது!" என்று அரசரிடம் கேட்டார்.

"எல்லாம் அழகாகத்தான் இருக்கிறது. உங்கள் மேற்பார்வையில் நடந்த காரியத்தில் பழுது சொல்ல முடியுமா! ஆனால் ராம

கைங்கர்யத்துக்காகச் செலவிட வேண்டிய தனத்தை இக்காரியத்தில் செலவிட்டதுதான் தர்ம விரோதம். அய்யனே! நீங்கள் ஏதோ செய்துவிட்டீர்கள். ஆனால் இந்த அபசாரம் என்னைத் தான் பாதிக்கும்..." என்றார்.

மந்திரி அய்யன் பரிகாசமாகச் சிரித்துக்கொண்டே, "அய்யனே! கவலைப்பட வேண்டாம். இதில் ராம அபசாரம் எதுவுமில்லை. ராமனுக்குப் பிரீதி அவனுக்குக் கோயில் கட்டுவது மாத்திரம் தானா? மக்களுக்கு நன்மை என்று பட்டதைச் செய்வதுதான் ராமனைப் போல் ராஜ்யத்தை ஆள நினைக்கும் உங்களுக்கு அழகு. அரசராகிய நீங்கள் உங்கள் மனத்துக்கு விருப்பமானதைச் செய்ய ஆசைப் படுகிறீர்கள். ஆனால் மந்திரியின் பொறுப்பு அதைவிடக் கடினமானது. உண்மையான மந்திரி நாட்டின் நிலை அறிந்து மக்கள் மனம் அறிந்து செய்ய வேண்டிய கடமைகளைக் காலத்தில் உணர்ந்து செய்யாவிட்டால் தன் கடமையிலிருந்து தவறியவனாகிறான். அடுத்த வருடம் இந்தக் குளத்துக்கு ஸ்நானம் செய்ய வரும் கோடிக் கணக்கான ஜனங்கள் இந்தக் குளத்தைப் பாழடைந்த நிலையிலேயே கண்டால் நம்முடைய ஆட்சியை எவ்வளவு குறைவாக மதிப்பிடுவார்கள்! அதனால்தான் இதைச் செய்யத் துணிந்தேன்" என்றார்.


அச்சுத நாயக்கர்

'மந்திரி செய்தது நியாயம்தான்' என்று அரசரின் மனத்தில் பட்டது. இருந்தாலும் அவர் தம் சுய கௌரவத்தை விட்டுக் கொடுக்க விரும்பவில்லை. "அய்யனே! நீங்கள் ஏதோ செய்து விட்டீர்கள். இதை நீங்கள் ஏதோ பொது மக்களுக்காகச் செய்ததாகச் சொன்னாலும் இதற்கு உங்கள் மனத்திலுள்ள சைவப் பற்றுதான் காரணம்" என்றார்.

எதிலும் ஆத்திரமோ கோபமோ அடையாத கோவிந்த தீக்ஷிதருக்கு அரசர் அப்பொழுது சொல்லிய வார்த்தைகள் சிறிது கோபத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கின. அரசருக்கும் தமக்கும் மதக் கொள்கையில் வேறுபாடுகள் இருப்பினும் அவர் தம் எதிரிலேயே இவ்வளவு வித்தியாசமாகப் பேசுவார் என்று நினைக்கவில்லை.

"அய்யனே! ஆத்திரத்தில் என்னை வித்தியாசமாகக் கருதிப் பேசி விட்டீர்கள். மகாமகம் என்பது சைவர்கள் வைஷ்ணவர் இருவரும் பொதுவாகக் கொண்டாடும் மகத்தான புண்ணிய தினம். கங்கை, யமுனை, கோதாவரி, காவிரி போன்ற புண்ணிய நதிகள் சைவனுக்கு மாத்திரம் சொந்தமல்ல. வைஷ்ணவர்களும் புண்ணிய தீர்த்தங்களாகக் கொண்டாடுகிறார்கள். புண்ணிய நதிகளாகிய கங்கை யமுனை முதலிய சப்த நதிகளும் வந்து கலக்கும் இந்தத் திருக்குளத்தில் மகாமகத்தன்று சைவர்களும் வைணவர்களும் வித்தியாசம் பாராட்டாமல் வந்து ஸ்நானம் செய்கிறார்கள். அப்படி இருக்கும்போது இதை நான் சைவர்களுக்காக மட்டும் செய்தேன் என்று எப்படி நீங்கள் கூற முடியும்!" என்று கேட்டார் மந்திரி 'அய்யன்'.

"சரிதான். அப்படி இருக்கப் பதினாறு லிங்கங்களை இந்தக் குளத்தைச் சுற்றி நீங்கள் ஸ்தாபிக்க நினைப்பது ஏன்!"

"ஏற்கனவே இந்தக் குளக்கரையைச் சுற்றிலும் நந்திகள் வைக்கப்பட்டிருந்தன. இந்தக் குளத்தில் வந்து கலக்கும் சப்த நதிகளின் சிலைகள் கன்னிகா ரூபத்தில் இந்தக் குளத்துக்குச் சமீபத்திலுள்ள சிவாலயத்தில்தான் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அதோடு சிவன் கோயில் ஸ்வாமிதான் சில புண்ணிய தினங்களில் இந்தக் குளத்துக்கு எழுந்தருளுவது வழக்கமாக இருக்கிறது. இத்தனை ஆதாரங்கள் இருப்பதால் இதை எவரும் ஆக்ஷேபிக்கமாட்டார்கள் என்றே செய்யத் துணிந்தேன்."

"நானே ஒரு வைஷ்ணவன். இதை ஆட்சேபிக்கிறேன்" என்றார் மன்னர்.

"ஆக்ஷேபிக்கிறேன் என்று கூறினால் மாத்திரம் போதாது. அதற்குச் சரியான காரணமும் ஆதாரமும் வேண்டும். நான் என்னுடைய ஆதாரங்களை முன்னதாகவே எடுத்துச் சொல்லி விட்டேன்."

"அய்யனே! நீங்கள் பேசுவதிலும் வாதிப்பதிலும் கெட்டிக்காரர். படித்தவர். இன்னும் எத்தனையோ காரணமும் ஆதாரமும் காட்டுவீர்கள். நான் இதை எல்லாம் நம்பமாட்டேன். உண்மையாக உங்கள் வார்த்தையே நியாயமாக இருக்குமானால் இந்தக் குளத்திலிருந்து கங்கையே எழுந்து வரவேண்டும். அப்படி எழுந்து வந்தால் இந்தக் குளத்தைச் சுற்றிப் பதினாறு கோயில்கள் கட்டி லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்ய நான் தராசில் ஏறி நின்று அந்த எடைக்குப் பொன் தருகிறேன்" என்றார் அரசர்.

"இது மிகவும் கடுமையான சோதனை. நான் என்ன பரீரதனா! ஆனால் அதற்காக நான் பயப்பட மாட்டேன். நான் தினமும் இரு வேளையும் செய்யும் அக்னிஹோத்திரம் பவித்ரமுள்ளதானால், கர்மானுஷ்டான ஆசாரங்களை விடாத உண்மையான அந்தணனானால், சரியான அத்வைதியானால், ஈசுவர பக்தியுள்ளவனால், கங்காதேவி வந்து என்னை அனுக்ரகிக்கட்டும். அவள் குளத்திலிருந்து எழுந்து வந்து என் கையில் பாய்ந்து அவளுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கும் இந்தப் பொற்காசை அங்கீகரிக்கட்டும்" என்று சொல்லித் திறந்த கரங்களில் ஒரு பொற் காசை வைத்துக் கொண்டு கண்ணைமூடி தியானத்தில் ஆழ்ந்தார்.

அமைதியாக இருந்த குளத்தில் நீர் பொங்கிக் குமிழி இட்டு எழும்பியது. கண்ணிமைப் பொழுதில் குளத்திலிருந்து எழுந்த நீர் மந்திரி அய்யனின் கையிலிருந்த பொற் காசை எடுத்துக் கொண்டு போய்க் குளத்தில் சேர்த்து அமைதி அடைந்தது.

அரசர் திகைப்பும் மகிழ்ச்சியும் அடைந்து மந்திரியை ஆலிங்கனம் செய்துகொண்டார்.

மன்னர் அச்சுத நாயக்கர் தராசில் ஏறி நின்று தம் எடைக்குச் சரியான பொன்னை மகாமகக் குளத் திருப்பணிக்காக அளித்தார். சில தினங்களில் குளத்தைச் சுற்றிலும் பதினறு சிறு கோயில்கள் அமைக்கப்பட்டு லிங்கப் பிரதிஷ்டையும் செய்யப்பட்டது.

மகாமக சமயத்தில் மகா ஜனங்கள் மன்னரைப் புகழ்ந்தார்கள். மந்திரி 'அய்யனை'க் கொண்டாடினர்கள்.

இதெல்லாம் கதைபோல் இருக்கலாம். மகா மகத்துக்காகக் குடந்தைக்கு விஜயம் செய்பவர்கள் மகாமகக் குளத்தில் பிரதான மண்டபத்தில் மன்னர் அச்சுத நாயக்கர் மந்திரி கோவிந்த தீக்ஷிதருக்கு மகாமகக் குளத் திருப்பணிக்காகத் தராசில் ஏறித் தம் எடைக்குச் சரியாகப் பொன் நிறுத்துக்கொடுக்கும் காட்சியையும், சிற்ப சௌந்தர்யம் நிறைந்த ராமஸ்வாமி கோவில் கல்யாண மண்டபத்தில் பிராதான்யமாக இருக்கும் தூணில் அச்சுத நாயக்கரின் கம்பீரமான உருவம் காட்சி அளிப்பதையும், கும்பேசுவரஸ்வாமி கோயிலில் கோவிந்த தீக்ஷிதர் லிங்க சொருபமாக இருந்து காட்சி கொடுப்பதையும் பார்த்தால் ; அவர்கள் பெருமையை உணர்ந்து இது கதை அல்ல என்று தான் சொல்லுவார்கள்.

# படித்துப்பாருங்கள்

## நந்திக் கலம்பகம்

தமிழகத்திலே அரசாண்ட மன்னர்களை யொட்டியே பல அற்புத காவியங்கள் எழுந்தன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நந்தி வர்மன் என்ற பல்லவப் பேரரசன் பெரும் புகழுடன் அரசாண்டு வந்தான். சிறந்த கலா ரஸிகனுகவும் இருந்து வந்தான். எல்லாவற்றுக்கும் மேலாக, 'பைந் தமிழை ஆய்கின்ற கோன் நந்தி'யாகவும் விளங்கினன். அதனுலேயே அவன்மீது 'நந்திக் கலம்பகம்' என்ற அருந்தமிழ்க் கவிதை நூல் எழுந்தது.

இந்த 'நந்திக் கலம்பகம்' என்ற நூலில் எவ்வளவு அருமையான பாடல்கள் இருக்கின்றன என்பதைப் பற்றி ரஸிகமணி டி.கே.சி. தான் அடிக்கடி நண்பர்களிடையே கூறி வந்தார். பல மேடைகளில் நந்திக் கலம்பகத்திலுள்ள கவிகளை எடுத்துக் கூறி வந்தார். பல பாடல்கள் பிழைபட்டும், சிதைந்தும் இருக்கின்றன.

இருக்கும் சில பாடல்களும் மிக நுட்பமான மனேபாவத்திலிருந்து மிக நுட்பமான மனேபாவத்தைத் தொடுவனவாக இருக்கின்றன. இவற்றைக் காண்பது மிக மிக அரியதோர் காரியம். ஆனல் ரஸிகமணி டி.கே.சி. அவர்கள் யாரும் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் சூழ்நிலையை அமைத்துப் பாடல்களைப் பாடி ரஸிகர்களைப் பரவசப்படுத்தி வந்தார். இதையெல்லாம் எழுதிப் புஸ்தகமாக வெளியிட்டால் தமிழர்களுக்கு எவ்வளவு பெரிய பொக்கிஷமாக இருக்கும் என்று பல நண்பர்கள் ரஸிகமணியிடமே அடிக்கடி கூறி வருவார்கள். அத்துறையில் அவர்கள் ஈடுபட்டார்கள். வேலை முடிவதற்கு முன் காலன் வேறுவிதமாகத் தீர்மானித்து விட்டான்.

எனினும் இந்தக் குறையை வித்துவான் ல. சண்முகசுந்தரம் அவர்கள் பெருமளவு நிவர்த்தி செய்து விட்டார். திரு சண்முக சுந்தரம் திருக் குற்றாலத்துக்கு அண்மையில் வசித்து வருபவர். ஆதலால், ரஸிகமணியிடம் பல ஆண்டுகள் நெருங்கிப் பழகி நந்திக் கலம்பகப் பாடல்களுக்கு டி. கே. ஸி. கூறும் விளக்கங்களையும் உரைகளையும் நன்கு அனுபவித்து அறிந்தவர். அவர், டி. கே. ஸி அவர்களின் பேரன் திரு தீப. நடராஜன் உதவிய, டி. கே. ஸி. யின் திருத்தங்களோடு கூடிய நந்திக் கலம்பக நோட்டுப் புத்தகத்தை வைத்து இந்நூலை வெளியிட் டிருக்கிறர்.

பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை ரூ. 2-8-0.

## இளந் தமிழா

இது ஒரு கவிதைத் தொகுதி .பல அருமையான கருத்துக்கள் செறிந்த பாடல்கள் இதில் அடங்கி யிருக்கின்றன. வீரம், காதல், தேச பக்தி ஆகிய பல சுவைகளை அள்ளி அள்ளிக் கொடுக்கும் பாடல்கள் இதில் அடங்கி யிருக்கின்றன. வீரன் குமரனின் பாடலைப் படித்துத் தேசபக்தியும் வீரமும் கொள்ளாமலிருக்க முடியாது.

'தியாகம்' என்ற அவ்வாமியார் கதையை ஆதாரமாகக் கொண்ட பாடல் நெஞ்சத்தை நெகிழ்த்து விடுகிறது. பூக்காரி, குயிற்குஞ்சு, கருக்கரிவாள் முதலிய தலைப்புக்களே போதும், பல பொருள்களைப் பற்றிப் பாடல்கள் இந் நூலில் உள்ளன என்று சான்று கூறுவதற்கு!

பொங்கலைப் பற்றிய பாடல் தமிழனின் உயரிய பண்புகளை நினைவூட்டுகிறது.

**தமிழன் திருநாள் பொங்கலென்றால் — அதில்**
**தமிழன் பண்புகள் பொங்குமன்றே**

**புவியெலாம் சேர்ந்தொரு வீடதிலே — யாரும்**
**புறம்பிலை என்றசொல் தமிழன்றே**

**யாதும் ஊரேனச் சாற்றியதும் — மக்கள்**
**யாவரும் கேளிர் என்றதுவும்**

**மேதினிக் குரைத்தவர் நம்முன்னேர் — இன்று**
**வேற்றுமை நாமேண்ணல் சரியாமோ ?**

இந்நூலைத் தமிழர்கள் பெரிதும் விரும்பிப் படிப்பார்கள் என்பது இக் கவிதை நூல் இரண்டாம் பதிப்பாக வெளி வந்திருக்கிறது என்பதி லிருந்தே தெரிந்து கொள்ளலாம். இதன் ஆசிரியர் திரு ம. ப. பெரியசாமித் தூரன் அவர்கள் தமிழ்த் தாய்க்கு அருந் தொண்டாற்றி யிருக்கிறர்.

பிரசுரம்: இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை-4. விலை ரூ. 2.




**வேம்பின் சேதனக் குணங்கள் கொண்டது இந்த ஒரே பற்பசை தான் - பற்களுக்கும் ஈறுகளுக்கும் மிகச் சிறந்தது!**

கல்கத்தா கெமிக்கல்

தென் இந்தியா ஆபீஸ் :
5/149, பிராட்வே, சென்னை

போன் 63




தந்தி SIMCO

எங்கள் 40 குச்சி கோபுரம் மார்க் சிம்கோ ஷீட் மார்க், சிம்கோ சைகிள் மார்க், 60 குச்சி வேட்டை சிங்கம் மார்க் தீப்பெட்டிகள்

கடற்கரை, குளிர்ப் பிரதேசங்களுக்கும் மற்றும் மலபார் மழைக்கும் உகந்தது

சிறந்த சரக்கு உற்பத்தி!
சிறப்பான பொதுஜன ஆதரவு!!

காந்திய முறைப்படி தினம் குடிசைத் தொழிலாகத் தயாராகும் 3,300 குரோஸ் தீப்பெட்டிகளும் எங்களுடைய டெப்போக்களிலேயே செலவாகி வருகின்றன



**சிம்கோ**
சிவகாசி. (S.I)

சகிக்க முடியாத உபாதை: தூக்கமும் கிடையாது. சுகமான நித்திரைக்கும் உபாதை நிவர்த்திக்கும்



**எப்ரிலைம்**

**EPHRILIME**




நீண்ட காலப்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

**யூனியன் டிரக் கம்பெனி லிட்.**
மதராஸ் டிப்போ :
2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ்-1

# குறைவாகத் தெரிந்த விஷயம்

[illegible]

## மிகத் தெரிந்த பிராண்ட்

# துஷார்

வனஸ்பதி

அவுன்சுக்கு 700. i.u வைடமின் 'A'யும், வைடமின் 'D'யும் சேர்த்து சிறப்பித்த துஷார் எல்லோருக்கும் தெரிந்த ஒரு வனஸ்பதி ஆகும். அதன் ஆரோக்கிய முறையிலுள்ள தயாரிப்பினாலும் ஆரோக்கியமூட்டும் குணங்களினாலும், சமையலுக்கு உபயோகிக்கும் சாதனங்களில் சிறந்தது.

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
கர்னூல் (தென் இந்தியா)




## 59. மாதோட்டம்

இலங்கை எனப்படும் ஈழ நாட்டில் நெடுங்காலமாக வழங்கி வரும் மொழிகள் சிங்களமும் தமிழும். அங்கு நிலவும் சமய நெறிகள் சாக்கியமும் சைவமும்.

தமிழகத்திற்கு அப்பாற்பட்ட இலங்கை முதலிய நாடுகளில் அமைந்த திருக்கோயில்களையும் திசை நோக்கித் தொழுதனர் தேவாரம் பாடிய பெரியோர். திருக்காளத்தி மலையில் நின்று கயிலாச மலையைப் பாடினார் திருஞான சம்பந்தர். அவ்வண்ணமே இராமேச்சுரத்திலிருந்து கடல் சூழ்ந்த இலங்கையில் உள்ள சிவாலயங்களைப் பாடிப் பரவினார் அப் பெருமான். இச் செய்தியைத் தெரிவிக்கின்றது திருத்தொண்டர் புராணம்.

"அந்நகரில் அமர்ந்தங்கண் இனிது மேவி
ஆழிபுடை சூழ்ந்தொலிக்கும் ஈழம் தன்னில்
மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்து செங்கண்
மழவிடையார் தமைப்போற்றிவணங்கிப்பாடி
சென்னிமதி புனைமாட மாதோட்டத்தில்
திருக்கேதீச் சரத்தண்ணல் செய்ய பாதம்
உன்னிமிகப் பணிந்தேத்தி அன்பரோடும்
உலவாத கிழிபெற்றார் உவகை யுற்றார்"

(அந்நகர் - இராமேச்சுரம்; ஆழி - கடல்)

என்று பாடினார் சேக்கிழார்.

ஈழ நாட்டிலே திருக் கோண மலையும் மாதோட்ட நகரும் தெய்வ மணக்கும் திருப்பதிகள். இவ்விரண்டும் தேவாரப் பாடல் பெற்ற பழம் பதிகள். பாலாவி யாற்றின் கரையிலே பண்புற அமைந்தது மாதோட்டம். அந் நகரில் கண்ணுக்கினிய தண்ணறுஞ் சோலையின் நடுவே நின்ற கேதீச்சரம் என்னும் திருக்கோயிலை மனக் கண்ணால் கண்டு மகிழ்ந்து பாடினார் திருஞான சம்பந்தர்.

"மாவும் பூகமும் கதலியும் நெருங்குமா
தோட்டநன் னகர்மன்னித்
தேவி தன்னொடும் திருந்துகே தீச்சரத்து
இருந்தவெம் பெருமானே"

(பூகம் - கமுகு)

என்று ஆதரித்து அழைத்தார். பாலாவி யாற்றிலே நீராடி, மாதோட்டத்தில் அமர்ந்த மாதொரு பாகனை வழிபடும் பேறு பெற்ற மெய்யடியாரைப் பாடிப் பணிந்தார் சுந்தரமூர்த்தியும்.

எத்திசையும் புகழ்பெற்ற இராசராசன் தமிழ் நாட்டில் அரசு புரிந்த காலத்தில் மகிந்தன் என்னும் மன்னவன் ஈழநாட்டை ஆண்டு வந்தான். அவன் மாற்றாரோடு உறவு பூண்டான் என்றறிந்த சோழன் சீற்றமுற்றான். உடனே, தமிழ்ப் படை திரண்டு எழுந்தது. இளவரசனாகிய இராசேந்திரன் படைத் தலைமை ஏற்றான். கருங்கடல் கடந்து ஈழ நாட்டில் இறங்கிய தமிழ் வெள்ளத்தைக் கண்ட போதே கலங்கினான் இலங்கை வேந்தன். ஆயினும் சிங்களப் படை சினந்து எழுந்து எதிர்த்தது. கடும்போர் புரிந்தது. இறுதியில் ஈழப்படை தோற்றது; சோழப் படை வென்றது. ஈழ மண்டலம் மும்முடிச் சோழன் என்னும் சிறப்புப் பெயருடைய இராச ராசனுக்கு உரியதாயிற்று. மும்






சென்னையில் 'ரேயினி ஆஸ்பத்திரி' என்றோர் புனித ஸ்தலம் இருக்கிறது. அங்கு பல மேல் நாட்டு வைத்தியர்கள் நம் நாட்டைத் தாய்நாடாகக் கொண்டு ஏழை பணக்காரன் என்ற பேதமின்றி நோயாளிகளுக்கு அருந் தொண்டாற்றி வருகிறார்கள். அவர்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவர் அங்கு நீண்ட நாளாகத் தொண்டாற்றும் டாக்டர் மிஸ் M. K. M. அலக்ஸாண்டர். இவரது பணியைப் பார்த்து உள்ளம் நெகிழ்ந்தார், ஏற்கனவே பல தர்ம கைங்கரியங்கள் புரிந்துள்ள திரு சீனிவாசன் செட்டியார். இப்போது அவர் தமது சிறிய தகப்பனாரின் ஞாபகார்த்தமாக ரூ. 15,000 செலவில் இந்த ஆஸ்பத்திரியில் 'அலக்ஸாண்டர் வார்டு' என்பதாக ஒரு புது கட்டடம் கட்டி வழங்கியிருக்கிறார். இப் புது வார்டை சென்னை பிஷப் திரு செல்லப்பா 11-2-56 அன்று திறந்து வைத்தார். படத்தில் வள்ளல் திரு செட்டியார், டாக்டர் மிஸ் அலக்ஸாண்டர், சென்னை பிஷப், திரு நாராயணசாமி அய்யர் முதலியவர்களைக் காணலாம்.

முடிச் சோழ மண்டலம் என்ற பெயரும் பெற்றது. இவ் வெற்றிச் சிறப்பினை

"திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொள
..............................................
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்
முரட்டொழில் சிங்களர் ஈழமண்டலமும்
திண்திறல் வென்றித் தண்டாற் கொண்டான்"

இராசராசன் என்று அவன் மெய்க் கீர்த்தி பாடிற்று.

ஈழ மண்டலம் மும்முடிச் சோழ மண்டலம் என்னும் புதுப் பெயர் பெற்றாற் போன்று மாதோட்ட நகரம் இராச ராசபுரம் என்று அழைக்கப் பெற்றது. பாடல் பெற்ற அப் பழம் பதியில் சோழ மன்னன் பெயர் விளங்கும் வண்ணம் தமிழ் நாட்டுத் தலைவன் ஒருவன் ஒரு சிவாலயம் எடுத்தான். அதற்கு இராச ராசேச்சரம் என்று பெயர் கொடுத்தான். அவ் ஆலயத் திருவிழாவிற்கு நிலங்கள் விடுத்தான். சிவபாதசேகரன் என்று இராசராசன் பெற்ற சிறப்புப் பெயருக்கு ஏற்ற முறையில் சோழ நாட்டிலும் ஈழநாட்டிலும் இராசராசேச்சரங்கள் எழுந்தன.

இராசராசன் கடல்சூழ்ந்த இலங்கைக்கும் காவலன் ஆயினன். சோழ நாட்டில் தஞ்சையைத் தலைநகர மாக்கிய வண்ணமே ஈழ நாட்டில் பொலனருவையைத் தலைநகரம் ஆக்கினன். அப்புது நகரில் ஓர் அழகிய கற்கோயில் எடுத்தான். 'தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை' என்ற தமிழ்நாட்டுப் பழமொழியின் வழி நின்று தன் அருமைத் தாயாகிய வானவன் மாதேவியின் பெயரை அவ் வாலயத்திற்கு வழங்கினன். வானவன் மாதேவீச்சரம் என்பது அத் திருக்கோயிலின் பெயர். சிவ தேவாலயம் என்னும் பெயரோடு அக்கோயில் இன்றும் இலங்கையில் காட்சியளிக்கின்றது. அதன் கட்டுக் கோப்பும் சிற்பப் பணியும் தமிழகத்தின் கலை வளத்திற்குச் சிறந்த சான்றாகும்.

இலங்கையில் பாடல் பெற்ற ஈசன் கோயில் இரண்டும் சிதைந்தும் அழிந்தும் சீரழிந்து நிற்கின்றன. மாதோட்டத்தில் மண் மேட்டைத் தவிர மற்றொன்றும் இல்லை. திருக்கோணமலை பொதுமக்களால் திருக்கணாமலை என்று திரிந்து வழங்கப் படுகின்றது. மேலை நாட்டு மொழிகளில் 'டிரிங்காமலி' என்று குறிக்கப்படும் மலை அதுவே. மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே அங்கிருந்த பழமையான திருக்கோயிலை இடித்துப் பாழாக்கினர் பரங்கியர் என்னும் போர்ச்சுகீசியர். அம்மலையிற் புதைந்து கிடந்த மூன்று அழகிய திருவடிவங்கள் இப்பொழுது கண்டு எடுக்கப்பட்டுள்ளன. இலங்கை மக்களின் ஆர்வத்தால் திருக்கோணமலையில் ஒரு சிறு கோயிலும் அமைக்கப்பட்டிருக்கின்றது.

மாதோட்டத்தில் உள்ள மண்மேட்டை அகழ்ந்து பார்த்து ஆராய்ந்தால் பழைய கேதீச்சரத்தையும் இராச ராசேச்சரத்தையும் பற்றிய அடையாளங்கள் கிடைக்கக் கூடும்.

"மூவரென இருவரென
முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழில்
மாதோட்டநன் னகரில்
பாவம்வினை அறுப்பார்பயில்
பாலாவியின் கரைமேல்
தேவன்எனை ஆள்வான்திருக்
கேதீச்சரத் தானே"

என்று தேவாரத்தில் பாடப் பெற்ற இறைவன் திருவுருவைக் காணும் நாள் எந்நாளோ?

# இந்தியாவிலே முதன்மையானது!

## ஆர்பிஎம் 20-40 ஸ்பெஷல்




## மோட்டார் ஆயில்

இந்த "மல்டி கிரேட்" மோட்டார் எண்ணெ, எஸ். ஏ. இ. ரகங்கள் 20, 30, 40 இவைகளின் முழு அனுகூலங்களையும் அளிக்கவல்லது. இதர மோட்டார் எண்ணெகளைக்காட்டிலும் இதன் மேம்பட்ட தரம் ரஸ்தா பரீக்ஷைகள், மற்றும் தனிப்பட்ட ஆராய்ச்சியின் மூலம் நிர்ணயிக்கப்பட்டது.

15 சதவிகிதம் வரை பெட்ரோல் சேமிப்பு ஏற்படுவதுடன் சிறந்த உழைப்பையும் அளிக்கிறது

**கால்டெக்ஸ் ஸ்டேஷன்களில் மாத்திரமே கிடைக்கும்**



N-3

இதோ உங்களுக்கு நம்பகமான சாதனம்

யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிமிடெட் உங்களுக்கு உலக வியாபகமான திறமை மிக்க பாங்க் வசதிகளை அளிக்கிறது.

## யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிமிடெட்

தலைமை ஆபீஸ் : 2, ராயல் எக்ஸ்சேஞ்ச் பிளேஸ், கல்கத்தா



செலுத்தப்பட்ட மூலதனம் ;... ரூ. 2 கோடி
ரிசர்வ் நிதி ... ரூ. 95 லட்சம்

ஜி. டி. பிர்லா
சேர்மன்

எஸ். டி. சதாசிவன்
ஜெனரல் மானேஜர்

---

# தரமே பிரதானம்...

அழகிய தோற்றத்துக்கும் உயர்ந்த வேலைப்பாட்டிற்கும் மிகச் சிறந்தது

## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

ரேடியோக்கள்தான் என்பதை ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் உள்ள மக்கள் அனைவரும் நன்கு அறிவார்கள்.



மாடல் 5222

5 வால்வ், 3-வேவ் பாண்ட், ஏ. ஸி. அல்லது டி. ஸி. மெயின்களுக்கு ஏற்றது. அதன் உள்ளேயே அமைக்கப்பட்ட ஏரியல். கவர்ச்சியான பிளாஸ்டிக் டியோ-டோன் காபினெட் ரூ.325/-

ஒவ்வொருவருடைய வாங்கும் சக்திக்கும், தேவைக்கும் ஏற்றபடி பல ரேடியோ மாடல்கள் பெருவாரியாக உள்ளன.



## "HIS MASTER'S VOICE" *Radio*

THE GRAMOPHONE COMPANY LIMITED

CALCUTTA — BOMBAY — MADRAS — DELHI




ஒரு கிராமத்தில் தெருக்கூத்து ஒன்று போட்டார்கள். அதில் சாம்பிராணிப் பிள்ளை ராஜாவேஷம் போட்டான். ஆட்டம் முடிந்ததும் அந்த உடுப்போடே வீட்டுக்குப் போனான். அவரவர்களுக்குத் தந்த உடுப்பு அவரவர்களுக்கே சொந்தமாக எடுத்துப் போகலாம் என்று ஆட்டம் போட்ட எஜமானர் சொல்லி விட்டிருந்தார். அதுவே ஆட்டத்துக்குக் கூலி.

சாம்பிராணி ராஜா வெகு குதூகலத்துடன் வீட்டுக்குப் போனான். வேஷம் போட்ட மற்றவர்கள் தங்களுக்குக் கிடைத்த உடுப்புகளைப் பத்திரமாக எடுத்து மடித்து வைத்துக்கொண்டார்கள். ஆனால் சாம்பிராணிப் பிள்ளை தன் அரச உடுப்பைப் போட்டுக் கொண்டேயிருந்தான்.

"எல்லாம் எடுத்து வையுங்கள்" என்றாள் மனைவி. அவள் ரொம்ப நல்லவள். புருஷனுக்கு வேண்டியதெல்லாம் வெகு கவனமாகச் செய்து வருவாள். சாம்பிராணியும் அவளிடம் வெகு பிரியம். ஆனால் அன்று வெகு கோபமாக இருந்தான். ஆட்டத்தில் ராஜா கோபமாக இருந்தான். அதை அப்படியே வைத்துக் கொண்டு அவன் வீட்டிலும் மனைவியை அதட்டினான்.

"அதிகமாகப் பேசாதே! நான் ராஜா என்பது தெரியுமா?" என்றான்.

மனைவிக்கு ஒன்றும் விளங்கவில்லை. பயந்தாள். புருஷனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று பயந்தாள். காலை பார்த்துக் கொள்ளலாம் என்று சும்மா இருந்து விட்டாள்.

மறுநாள் காலையிலும் சாம்பிராணி தான் ராஜா வென்றே எண்ணிக் கொண்டு "மந்திரியே!" என்று அழைத்தான். அவர்கள் வீட்டில் ஒரு நாய் வளர்த்திருந்தார்கள். அதற்கு 'மந்தி' என்று பெயர்.

"மந்திரி!" என்று சாம்பிராணி அழைத்ததும் அது தன்னை எஜமானன் கூப்பிட்ட

தாக எண்ணி வாலை ஆட்டிக் கொண்டு வந்தது.

"வா, வேட்டைக்குப் போவோம்!" என்றான் சாம்பிராணி.

வெளியே வேஷத்துடனே கிளம்பினான்.

"ஐயோ! போகாதீர்கள்!" என்றாள் மனைவி. ஊரார் சிரிப்பார்கள் என்று அவள் பயந்து புருஷனைத் தடுத்தாள்.

"என் பிரிய மனைவியே! அரசியே! எதிரிகள் வந்துவிட்டார்கள், நான் யுத்தத்துக்குப் போக வேண்டும், தடுக்காதே!" என்றான் ராஜா. ஆட்டத்தில் அந்தமாதிரி ஒரு கட்டம் இருந்தது. அதன்படி நடந்தான்.

"மோசமாகப் போச்சே!" என்று மனைவி அழுதாள்.

"அழ வேண்டாம்! நான் வெற்றி மாலையுடன் திரும்பி வருவேன்" என்று சாம்பிராணி தெரு வழியாகச் சென்றான். நாய்க்கு வெகு சந்தோஷம். கூடவே ஓடிற்று.

போகும்போது வழியில் ஒரு நரி வந்தது. அதற்கு விஷயம் புரிந்தது.

"ஐயா! சாம்பிராணி ராஜாவே! தேசத்திலுள்ள அரசர்கள் எல்லாருடைய வேஷமும் முடிந்து விட்டது. தங்களுடைய ஆட்டம் ஒரு ராத்திரி நடந்தது. மற்ற ராஜாக்களின் ஆட்டம் கொஞ்சம் நீடித்து நடந்தது. ஆனால் அதுவும் எல்லாம் முடிந்து விட்டது. தாங்கள் அரமனைக்குத் திரும்பி விடலாம்" என்றது நரி.

அந்த நரி நல்ல நரி. தினசரி பத்திரிகைகள் படித்து வந்த நரி. ஜமீன்தார் ஒழிப்பு. 526 ராஜாக்களின் சமாப்தி எல்லாம் படித்துத் தேர்ந்த குள்ளநரி.

"மந்திரி!" என்று தன் நாய் மந்திரியைப் பார்த்துச் சாம்பிராணி கேட்டான். "இது உண்மையா? இந்த நரியின் பேச்சை நம்பலாமா? உன் பாஷையில் சொல், எனக்கு விளங்கும்!"

இப்படி எஜமானன் தன்னைக் கேட்டதற்கு நாய்க்கு வெகு திருப்தி. "ஹூம்! ஹூம்!" என்று மெதுவாக சப்தம் செய்தது.

சாம்பிராணி வீடு திரும்பினான். நரி அங்கே இருந்த ஒரு கோழிக் குஞ்சைக் கவ்விக் கொண்டு ஓடிற்று. அதன் தாய் "கொக்! கொக்!" என்று தன் மற்ற குஞ்சுகளைக் கூட்டிக் கொண்டு குடிசைக்குள் ஓடிப் புகுந்தது.

"எல்லா ராஜாக்களும் ஒழிந்தார்கள். நானும் இனிமேல் சும்மா இருப்பேன்" என்று மனைவிக்குச் சாம்பிராணி வாக்குறுதி கொடுத்தான். அவளும் கவலை நீங்கி சந்தோஷமாக வீட்டு வேலையில் மனம் செலுத்தினாள்.



# கேஷ்ரஞ்சன்

தாங்கள்
கூந்தலின்
நன்மையை
விரும்புவோர்



விரும்புவார்கள்



கவிராஜ்
கல்கத்தா.

## ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ் ஜலதோஷத்தை நிறுத்துக

ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத்திணறல், இருமல், தும்மல், மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான, அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றி சுகமாக சுவாசித்து குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இல்லையேல் பணம் வாபஸ்.

அவளுடைய
பளபளப்பான
வெள்ளைப்
புடவைகள்
அவள்
சிநேகிதிகளின்
புகழ்ச்சியை
பெற்றன





என் எஜமானியின் சிநேகிதிகளுக்கு அவள் வெள்ளையான புடவையை எப்பொழுதுமே அணிவது எப்படி என்று அவளிடம் ஒரு நாள் கேட்பதற்கு முன்பு தெரியாது.



தன்னுடைய எல்லா ஆடைகளுக்கும் (பருத்தி, ஆர்ட் ஸில்க் துணிகள் மாத்திரம்) புடவைகள் உள்பட டினோபால் உபயோகிக்கிறேன் என அவள் சொன்னாள். டினோபால் உபயோகிக்கப்பட்ட வெள்ளைத் துணிகள் எடுத்துக் காட்டாக இருக்கக் காரணம், அவைகளின் கண்களைப் பறிக்கும் வெண்மைதான்.





டினோபால் அளிக்கும் வெண்மை 3 அல்லது 4 சலவைக்கு நிலைக்கும்; அதனால் அதை அடிக்கடி உபயோகப் படுத்தவேண்டியதில்லை. ஒரு கால் டீஸ்பூன் அளவு டினோபால் ஒரு வாளி நிறைய உள்ள துணிகளை வெளுக்கின்றன என்பது நினைவிலிருக்கட்டும்.

## டினோபால்

Geigy

துணிகளை மிகுந்த வெளுப்பாகச் செய்கிறது

பாலர் தொடர் கதை

# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா

## 33. பர்மாவில் ரமணி

மதுரநாயகத்தின் வீடு பூட்டப்பட்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்ட ரமணி, "என்ன இது! நாடகக் கொட்டகையும் பூட்டப்பட்டிருக்கிறது. மானேஜர் வீடும் பூட்டப்பட்டிருக்கிறதே!" என்றான்.

உடனே சிற்சபேசன், "எதற்கும் பக்கத்து வீட்டிலே கேட்டுப் பார்க்கச் சொல்லலாம்" என்று சொல்லி விட்டு, டாக்ஸி டிரைவரிடம், "டிரைவர், இந்த வீட்டிலே குடியிருந்த நாடக சபா மானேஜரும், அவர் சம்சாரமும் எங்கே போயிருக்கிறார்கள் என்று கேட்டுப் பார்" என்றார்.

அவர் சொன்னபடி டாக்ஸி டிரைவர் பக்கத்து வீட்டுக்குச் சென்றார். விசாரித்துப் பார்த்து விட்டுத் திரும்பி வந்து, "அடடே, பக்கத்து வீட்டு அம்மா சொன்ன பிறகுதான் எனக்குக்கூட ஞாபகம் வருகிறது. இந்த நாடக சபா டில்லிக்குப் போயிருக்கிறது, சார். மானேஜர் அவர் சம்சாரத்தையும் கூடவே அழைத்துக் கொண்டு போயிருக்கிறாராம். வரப் பத்துப் பதினைந்து நாட்களாகுமாம்" என்றார்.

"என்ன! டில்லிக்குப் போயிருக்கிறார்களா! திரும்பி வரப் பத்துப் பதினைந்து நாட்கள் ஆகுமா?" என்று வியப்புடன் கேட்டான் ரமணி.

"ஆமாம், தம்பி! டில்லியிலே இப்போது நடக்கிறதே தேசிய நாடக விழா, அதிலே கலந்து கொள்ளத்தான் இந்த சபாவும் போயிருக்கிறது. போய் நாலைந்து நாளாகிறது."

டிரைவர் பேச்சைக் கேட்டதும், ரமணிக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். உடனே சிற்சபேசன், "ரமணி, என்ன பண்ணுவது? சந்தர்ப்பம் சரியில்லை. நாம் எப்படியும் நாளைக்குக் கப்பல் ஏறியாக வேண்டுமே!" என்றார். மதுரநாயகத்தைப் பார்க்க முடியாது போனது ரமணிக்கு வருத்தமாகத்தான் இருந்தது. ஆனாலும், என்ன செய்வது?

மறு நாள் காலையில் சிற்சபேசன் குடும்பத்தாருடன் பர்மாவுக்குக் கப்பல் ஏறி விட்டான் ரமணி.

முதல் வகுப்பில் அவர்கள் பிரயாணம் செய்ததால், வேண்டிய வசதிகளெல்லாம் இருந்தன. டேபிள் டென்னிஸ், கேரம், செஸ், பில்லியார்ட்ஸ்—இப்படிப்பட்ட விளையாட்டுகளுக்கும் கப்பலில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மற்றவர்கள் விளையாடும் போதெல்லாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பார்கள், ரமணியும் மாலதியும். ரமணிக்குத் தெரிந்த விளையாட்டு கேரம் ஒன்றுதான். அதைத் தினமும் கொஞ்ச நேரம் மாலதியுடன் விளையாடுவான். மாலை நேரங்களில் கப்பலின் மேல் தளத்துக்கு மாலதியும் ரமணியும் போவார்கள். அங்கு நின்று கொண்டு சுற்றி நாலு புறமும் பார்ப்பார்கள். எங்கு பார்த்தாலும் ஒரே தண்ணீராக இருக்கும். தண்ணீரின் நீல நிறத்தையும், அதில் குதித்து விளையாடும் மீன்களையும் பார்ப்பதிலே அவர்களுக்கு ஒரு தனி ஆனந்தம். இப்படியே நான்கு நாட்கள் ஓடி விட்டன. ஐந்தாவது நாள் காலை கப்பல் ரங்கூன் துறைமுகத்தை அடைந்தது. பர்மாவின் தலை நகரம் ரங்கூன். அங்கு தெரிந்தவர்கள் வீட்டிலே இரண்டு நாட்கள் தங்கியிருந்தார்கள். மூன்றாம் நாள் அங்கிருந்து ரயிலில் புறப்பட்டு மாந்தலே என்ற நகருக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

ரயிலை விட்டு இறங்கியதும் சிற்சபேசன் எல்லோரையும் அழைத்துக் கொண்டு அங்குள்ள தமது பங்களாவுக்குச் சென்றார். அங்கு சென்றதும் சிற்சபேசன் ரமணியிடம், "ரமணி, இன்று முதல் நீ என்னை எப்படித் தெரியுமா அழைக்க வேண்டும்? 'அப்பா' என்றுதான் அழைக்க வேண்டும். காமாட்சிதான் இனி உன் அம்மா. மாலதி உன் தங்கை. யார் கேட்டாலும் அப்படியே சொல்லிவிடு. நாங்களும் அப்படித்தான் சொல்வோம். இனி உன்னை அனாதை யென்று யாரிடமும் சொல்ல வேண்டாம்!" என்று சொல்லி வைத்து விட்டார்.

அவர் சொன்னதைக் கேட்டதும், ரமணிக்கு என்ன சொல்லுவதென்றே தெரியவில்லை. "அடடா! அனாதையாகிய என்னிடம் இவர்கள் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறார்கள்! இவர்களுக்கு நம்மால் பதிலுக்கு என்ன செய்ய முடியும்? இவர்கள் மனம் நோகாமல் நடந்து கொள்ள வேண்டும். 'நல்லவன்'

## காய் கறித் தோட்டம்!

குட்டைக் குட்டைக் கத்திரிக்காய்
குண்டு குண்டாய்ச் சுண்டைக்காய்
நெட்டை நெட்டை முருங்கைக்காய்
நீண்டு தொங்கும் புடலங்காய்
சட்டி பானை போலவே
தடித்திருக்கும் பரங்கிக்காய்
பட்டை போட்ட வெண்டைக்காய்
பச்சைநிறப் பாவற்காய்
சொட்டை யில்லாக் கீரைகள்
சொக்கும் நல்ல தககாளி
தட்டப் பயத்தங் காயுடன்
தடித்த கோணற் பீர்க்கங்காய்
இத்தனையும் தோட்டத்தில்
என்று தானே எண்ணினாய்.
இல்லை இல்லை மார்க்கெட்டில்
இருக்கும் எங்கள் கடையிலே!

—'அப்துல்'

என்று பெயரெடுக்க வேண்டும்'' என்று நினைத்துக் கொண்டான்.

மாந்தலே சென்ற சில நாட்களுக்குள், அந்த நகரைப் பற்றி ரமணி பல விஷயங்களைத் தெரிந்து கொண்டான். மாந்தலே மிகவும் பழைமையான ஒரு நகரம். பர்மாவின் தலைநகராக அது ஒரு காலத்தில் இருந்தது. அந்தக் காலத்தில் கட்டப்பட்ட ஒரு பெரிய கோட்டையும் அங்கே இருக்கிறது. 1942-ம் வருஷம் ஜப்பானியர் குண்டு போட்டதில் அங்கிருந்த பல வீடுகள் அழிந்து சாம்பலாகி விட்டன. இப்படிப் பட்ட விஷயங்களுடன் இன்னொரு முக்கியமான விஷயத்தையும் ரமணிக்குச் சிற்சபேசன் கூறி யிருந்தார்.

ஒரு நாள் அவர் அவனுடன் பேசிக் கொண்டிருந்த போது, ''ரமணி! உனக்கு ஒரு விஷயம் தெரியுமா? நமது நேதாஜி சுபாஷ்சந்திர போஸ் இந்த ஊரில் இரண்டு இரண்டரை வருஷத்துக்கு மேல் இருந்திருக்கிறார்'' என்றார்.

''நமது நேதாஜியா? எந்தத் தெருவில் குடியிருந்தார்?'' என்றான் ரமணி.

''இங்கே நம்மைப் போல் குடியிருக்கவில்லை. ஜெயிலில் இருந்தார்!''

''ஜெயிலிலா! என்ன காரணம்?''

''காரணமென்ன? இந்தியா சுதந்திரமடைவதற்குப்பாடுபட்டாரே, அதுதான் காரணம். ஆங்கிலேயர் அவரை இந்தியாவிலிருந்து இங்கு கொண்டு வந்து ஜெயிலில் வைத்திருந்தார்கள்.''

''அடடே, அப்படியா!''

''ஆமாம். நேதாஜி மட்டும்தான் இங்கு இருந்தார் என்று நினைத்து விடாதே! 'சுதந்திரம் எமது பிறப்புரிமை' என்று வீர முழக்கம் செய்தாரே திலகர், அவர்கூட இந்த ஊர் ஜெயிலிலே ஆறு வருஷம் இருந்திருக்கிறார். இங்கே இருந்த போதுதான் அவர் 'கீதா ரகசியம்' என்ற புத்தகத்தை எழுதினார்.''

''திலகர்கூட இங்கு இருந்திருக்கிறாரா?'' என்று கேட்டான்.

''ஆமாம், அவர்களெல்லாம் நம் தேச விடுதலைக்காகத் தவம் கிடந்த இடம்தான் மாந்தலே!''

சிற்சபேசன் கூறியதைக் கேட்டதும், ரமணி அந்தத் தலைவர்களை நினைத்துக் கையெடுத்துக் கும்பிட்டான்.

ரமணி அந்த நகரைப் பற்றித் தெரிந்து கொண்டதோடு, அங்கு பேசப்படும் பர்மிய பாஷையையும் கற்றுக் கொள்ள ஆரம்பித்தான். அவனுக்கும், மாலதிக்கும் பர்மியபாஷையைக் கற்றுக் கொடுக்க ஓர் ஆசிரியரை ஏற்படுத்தினார் சிற்சபேசன்.

ரமணி ஆறு மாதங்களில் பர்மிய பாஷையைக் கூடுமானவரை நன்றாகக் கற்றுக் கொண்டு விட்டான். அழகாகப் பேசுவான்; தடங்கல் இல்லாமல் படிப்பான். மாலை நேரங்களில் மாலதியையும், அக்கம் பக்கத்திலுள்ள குழந்தைகளையும் கூட்டி வைத்துக் கொண்டு ரமணி பர்மிய பாஷையில் கதைகளெல்லாம் சொல்லுவான். நாடக சபாவிலே இருந்ததால், அங்கே பார்த்த நாடகங்களைக் கதைகளாகக் கூறுவான்.

நாள் ஆக ஆக, அந்த வட்டாரத்திலுள்ள இந்தியக் குழந்தைகள், பர்மியக் குழந்தைகள் எல்லாருமே ரமணியின் கதையைக் கேட்கத் திரண்டு வந்து விட்டார்கள். எத்தனை நாட்களுக்குத் தான் படித்த கதைகளையும் கேட்ட கதைகளையுமே சொல்லிக் கொண்டிருப்பது? நாளடைவில் அவனே கற்பனை செய்து பல நல்ல கதைகளையெல்லாம் கூற ஆரம்பித்து விட்டான். இதனால் ரமணியின் பெயர் அந்த வட்டாரத்தில் மிகவும் பிரபலமாகி விட்டது!

சிற்சபேசனும் காமாட்சி அம்மாளும், 'இப்படிப்பட்ட ஒரு பையன் நமக்குக் கிடைத்ததே நம் அதிர்ஷ்டம்தான்!' என்று நினைத்து ஆனந்தமடைவார்கள்.

மாலதியோ, ''ரமணி அண்ணனின் கதையைக் கேட்க நம் வீடு தேடி எத்தனை பேர் வருகிறார்கள்!'' என்று எண்ணிப் பெருமைப்படுவாள். ஆனால், ரமணி விரைவிலேயே இவர்களை விட்டுப் பிரியப் போகிறான் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்? அது ரமணிக்கே தெரியாதே! (தொடரும்)





## மதிப்பில் சிறந்த ப்ளேட் எதுவென்று நீங்கள் எளிதில் சொல்லமுடியும்

ஒரு ப்ளேடின் மேன்மையை நிர்ணயிக்க உறுதியான பரீக்ஷை அதைக்கொண்டு க்ஷவரம் செய்துகொள்வதுதான்! ஒரு சிறந்த, கூர்மையான ப்ளேட் சுக க்ஷவரத்தை ஒரு தடவையல்ல, அநேகம் தடவைகள் அளிக்கிறது.

ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை ஏது தயாரிப்பான வேறெந்த ப்ளேடுகளுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். உங்கள் முகத்தில் எவ்வளவு சுலபமாக வழுக்கிக்கொண்டு செல்லுகிறது. அதற்குப் பிறகு எவ்வளவு மழுமழுப்பாக உங்கள் முகம் ஆகிறது என்பதையும் கவனியுங்கள். அதே போல் அதன் கூர்மை எவ்வளவு காலத்திற்கு நீடித்திருக்கிறதென்றும் பாருங்கள், நாளுக்கு நாள் அதன் சுக க்ஷவரத்தை அநுபவிப்பீர்கள்.

ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள் எவ்வளவு நேர்த்தியாக இருக்கின்றன என்பதை, அவைகளைக்கொண்டு க்ஷவரம் செய்துகொண்டு பாருங்கள். இதில் தவறுதலுக்கு இடமேற்படுவதில்லை. ஸெவன் ஓ'க்ளாக்தான் உங்கள் பணத்திற்குப் பெறுமானம் கொடுக்கிறது என்று தெரிந்துகொள்ளுவீர்கள்.

**7 o'clock**



**BLADES**

**ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள்**

மூன்றாவது பரிசுக் கதை.10

கல்கி திரு.ரா.கிருஷ்ணமூர்த்தி

நினைவுச் சிறுகதைப் போட்டி

# தண்டனை

சம்புகுமாரன்



பயங்கரமாக அலறியபடியே படுக்கையிலிருந்து எழுந்தார் பசுபதி. அவர் உடல் வெட வெட வென்று நடுங்கியது. உடல் நடுக்கத்தைக் கூட ஒருவாறு சமாளிக்கத் தயாராக இருந்தார். ஆனால் அவர் உள்ளத்தில் ஏற்பட்ட நடுக்கம்! அதை எப்படிச் சமாளிப்பது! எந்த வைத்தியனால் சரிப்படுத்த முடியும்! யோசித்தார். ஒரே கணம்தான். முடிவுக்கு வந்து விட்டார். "கண்ணன்தான். ஆம்! அவனால் இதைக் குணமாக்க முடியும்" என்று முணுமுணுத்துக் கொண்டே அசுர வேகத்தில் எழுந்து நடந்தார் பசுபதி.

"ஐயோ! இந்த நேரத்திலா! விபரீதமாக ஏதாவது நடந்து விட்டால்!" என்று அலறிய மங்களத்தின் குரல் மாடிப் படிகளில் தடதட வென்று இறங்கிய பசுபதியின் காலடி ஓசையில் மிதிபட்டு உருக்குலைந்து விட்டது.

ஊர் ஓரத்தில் பிடாரி மேட்டை ஒட்டியபடியிருக்கும் கண்ணனின் ஒற்றைக் குடிசை, இதோ கூப்பிடு தூரத்தில் வந்து விட்டது. நிலவில் மங்கலாக அந்தக் குடிசை தெரிந்ததும் அவரது கால்கள் நத்தை நடையே போட்டன.



'கண்ணன் தன்னைக் கண்டதும் என்ன செய்வான்!' அவர் மனத்தில் எழுந்த இந்தக் கேள்வி, பயங்கர நினைவில் முடிந்தது. 'உயிரைக் குடித்து விடுவதாகச் சபதம் செய்திருப்பவனை அந்த நள்ளிரவில் தனியாகப் பார்ப்பது உசிதமா! உயிருக்கு ஆபத்து ஏற்படாமல் இருக்கச் சந்தர்ப்பம் உண்டா!' அவர் சட்டென்று நின்று விட்டார்.

நூறு கஜ தூரத்தில் குடிசைக்குப் பத்தடி அப்பால் சுமைதாங்கியில் கண்ணன் உட்கார்ந்திருந்தது தெரிந்தது. "ஆ! அவன் கையில் நிலவொளியில் பளபளக்கிறதே. அது என்ன! கட்டாரியா! அட பாவி!" பசுபதியை அறியாமலேயே வார்த்தைகள் வெளி வந்தன. திரும்பி விடுவோமா என்று யோசிக்கையிலேயே கால்கள் அவரது வீட்டுப் பாதையில் பத்தடி நடந்து விட்டன.

'முடியாது. நீ வீட்டுக்குப் போகக் கூடாது. வீட்டில் போய் என்ன சாதிக்கப் போகிறாய்! மரணத்தைச் சில மணி நேரம் ஒத்திப் போட முயல்வாய். அது நடக்காத விஷயம். திரும்பி நட" என்று மனச்சாட்சி ஆர்ப்பரித்தது.

பசுபதியால் திரும்பத்தான் முடிந்தது. ஆனால் நடக்க முடியவில்லை. மீண்டும் மீண்டும் கால்களில் அதே தள்ளாமை. வீட்டுக்குப் போவதானால் நாலு கால் பாய்ச்சலில் ஓட முடியும். கண்ணனை நெருங்குவதற்கு, கால்கள் நகரவே சக்தியற்றிருந்தன. இதை எப்படிச் சமாளிப்பது! தயங்கும் மனத்தைத் திடப் படுத்த, தமக்குள்ளே ஒரு கேள்வியைப் போட்டுக் கொண்டார். 'கண்ட சொப்பனம் உண்மையானால், கண்ணனின் மனநிலையும் அதுவேயானால் அவனை நெருங்குவதில் என்ன ஆபத்து!' எவ்வளவு சமாதானம் கூறியும் மனத்தைத் தேற்ற முடியவில்லை அவரால்.

கையில் இருந்த கட்டாரி நழுவி விழுந்தது. அதை எடுக்கக் குனிந்த கண்ணன் கையை இழுத்துக் கொண்டான். சுமைதாங்கியில் உட்கார்ந்த வண்ணம் நான்கைந்து முறை மேலும்-கீழும் பார்த்தான். பிறகு எழுந்து சுமைதாங்கி மேல் நின்று நான்கு புறமும் சுற்றிப் பார்த்துவிட்டு, எட்டும் தூரத்தில் இருந்த மரத்தின் கிளையை உலுக்கினான். சட்டென்று அதனின்றும் ஏதோ விழுந்து தொங்கியது. கயிறுபோன்ற அதன் நுனியில் வட்டமாக அது என்ன! "கண்ணன்" என்று கூச்சலிட்டார் பசுபதி.

அடுத்த கணம் அவரது காலில் அதுவரை இருந்த விலங்கு அறுந்தது. நாலுகால் பாய்ச்சலில் கண்ணன் இருந்த திசையைநோக்கித் தலை தெறிக்க ஓடினார்.

## 2

கருத்தட்டான்குடி [illegible]

யாகி இருக்கிறார். தமக்கு அடுத்தபடியாகப் பசையுள்ள குடும்பத்தில் அந்த வீட்டுப் பையனைக் கல்லூரிக்கு அனுப்பச் செய்து, படிப்பில் கவனமற்ற அந்த மைனர் கெட்டலைந்து குடும்பத்தில் புயலைக் கிளப்பி, எரிந்த வீட்டில் கிடைத்தது ஆதாயம் என்ற ரீதியில் லாபமடைந்திருக்கிறார் பசுபதி. இது போலெல்லாம் சாமர்த்தியமாக இருந்திராவிட்டால் பூர்வீகமாகக் கிடைத்த சொற்ப நிலத்தைக் கொண்டு அவர் பண்ணை பசுபதியாகி யிருக்க முடியாது. இந்தச் சாமர்த்தியங்களெல்லாம் அவரது உயிருக்கே உலையாக அமைந்து விடும் என்று அவர் அப்போது கண்டாரா, என்ன!

## 3

பசுபதியின் பண்ணையாள்தான் காத்தான். அவரது பாட்டனார் காலத்திலேயே "கருத்தட்டான்குடி பண்ணை" பிரசித்தம். காத்தான் அப்போது வாலிபப் பையன். பசுபதியின் தகப்பனாருடன் பிறந்தவர்கள் ஏழு எட்டுப் பேர். எனவே பாகப் பிரிவினையில் பண்ணை நசித்து விட்டது. பண்ணை பிரிந்து சிதறாவிட்டாலும் பசுபதியின் தகப்பனாருடைய சொற்ப நிலங்களைக் காவல் செய்து சொந்த சாகுபடிக்கு அவருடன் ஒத்துழைத்தான் காத்தான். அக்குடும்பத்தின் வேளாண்மை வருமானத்துக்குக் காத்தான் மட்டும் காரணமாகஇருந்திராவிட்டால் பசுபதிக்குப் பூர்வீக

கலைந்துவிட்ட பண்ணைகளைப் பெறவேண்டும் என்று தானோ என்னவோ பக்கத்தூரில் பெரிய மிராசுதாரின் ஏக புதல்வி மங்களம் பசுபதிக்கு மனைவியாக வாய்த்தாள். அவள் கொண்டு வந்த செல்வமும் பசுபதியின் கஞ்சக் குணமும், செத்துவிட்ட பண்ணைக்குப் புத்துயிர் அளித்து விட்டன.

பெயர்தான் மங்களமே தவிர குணம் அவளிடம் குப்பைமேடாக இருந்தது. கஞ்சத்தனமும், இரக்கமற்ற தன்மையும், ஏழைகளை நாயை விடக் கேவலமாக மதிக்கும் மனப்பான்மையும் அவளுடன் பிறந்த குணச் செல்வங்கள்!

கடன்காரர்களிடம் ருத்ரமூர்த்தியாகும் பசுபதி மங்களத்திடம் பெட்டிப் பாம்பாகி விடுவார். கணவனிடம் கூட அடக்கத்தை மேற்கொள்ள மாட்டாள். ஏழைகளுடன் பேசிப் பழகுவது மங்களத்துக்குப் பிடிக்காதென்றால் அவளது பெண் லக்ஷ்மிக்கு ஏழைகளைப் பார்க்கவே கசப்பு.

மங்களம், பசுபதி ஆகியோரின் குணத்துக்காக அல்லாவிடினும் தனது நெடுநாளையப் பழக்கத்தின் காரணமாக, காத்தானுக்குச் சிதைந்த பண்ணை சீரானதில் சந்தோஷம். தனது சேவைக்குச் சரியான விதத்தில் பண்ணையார் விசுவாசம் காட்டாதது பற்றி அவனுக்கு அக்கறை யிருந்ததாகத் தெரியவில்லை. ஏழ்மைக்கு மேலாக அவனிடம் கொள்கை குன்று விளக்காய் சுடர் விட்டது. உழைப்பால் ஏற்படும் களைப்பும், நன்றி உணர்வற்ற எஜமானனின் ஏச்சுக்களால் உண்டாகும் ஆயாசமும் அவனது செல்வமணிகளான கண்ணனையும் வள்ளியையும் பார்த்தவுடன் மறைந்துவிடும்.

வயோதிகம் காத்தானுக்குத் தள்ளாமையைத் தந்தது. முன்னைப் போல் அவனால் ஓடியாடி வேலைசெய்ய முடியவில்லை. காத்தானின் தள்ளாமை, பசுபதிக்கு இடது கை ஒடிந்தது போல் இருந்தது. லேவாதேவியில் சூரரே தவிர சாகுபடி விஷயத்தில் அதிகமாக அறியாதவர். எனவே, வேளாண்மையில் தேர்ந்தவனாகிவிட்ட கண்ணனை வைத்துக் கொண்டு, சாகுபடி விஷயத்தில் தாம் தலையிடாமல், காத்தானிடமே நிலங்களைக் குத்தகைக்கு விட்டு விடலாமா என்று யோசித்தார்.

ஆனால், மங்களம் காத்தானுக்கு இந்த மகத்தான பாக்கியத்தை யளிக்க விரும்பவில்லை. தன் உறவினன் ஒருவரை ஊரிலிருந்து வரவழைத்து நிலங்களை அவரிடம் ஒப்படைக்கச் செய்து விட்டாள். காத்தானை, பூராவும் ஒதுக்கிவிட விரும்பாத பசுபதி, அவனிடம் நான்கைந்து காணியைக் குத்தகைக்கு விட்டார். அப்பா! அவர் அதற்குத்தான் மங்களத்திடம் பட்ட அவஸ்தை!

கால வெள்ளத்தில் கடல்நுரையாகி விட்டான் காத்தான். நாற்று நடவை ஒரு நாள் படை படைக்கும் வெய்யிலில் மேற் பார்த்துக் கொண்டிருந்தவன் களைப்பாக இருக்கிறது என்று நிழலில் படுத்தவன் தான். பிறகு அவன் மூடிய கண்ணைத் திறக்கவே இல்லை.

## 4

பிடாரிமேட்டிலிருந்து சுமை வண்டிகள் பசுபதி வீட்டை நோக்கிப் புறப்பட்டுவிட்டன. வெறுங் கையுடனும் உள்ளச் சுமையுடனும் வீடு திரும்பிக் கொண்டிருந்தான் கண்ணன். மதயானை கலக்கிய குட்டையைப்போல் குழம்பியிருந்தது அவன் மனம். அடுக்கடுக்காக அவன் முன் பல பிரச்னைகள். வேளாண்மைச் செலவுகளுக்காகக் கூட விடாமல், விளைச்சல் எல்லாவற்றையும் அப்படியே வாங்கிக் கொண்டு விட்டார் பசுபதி. சொந்த சாகுபடியாக இருந்தாலே. கண்டு முதல் நஷ்டம்தான். இந்த அழகில், குத்தகையில் மணி நெல் குறையக் கூடாது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார் பசுபதி.

அவன் எதிர்பார்த்தது இலவு காத்த கிளியின் கதையாயிற்று. அதிகமான வண்டல் தங்கியதால் குத்தகை நிலம் பூராவும் சூறையாகிவிட்டது. கண்ணன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். 'சூறை விழுந்ததை நம்பாத பசுபதி, கண்டுமுதலைப் பதுக்கி விட்டதாக அல்லவா சந்தேகப்படுகிறார்!' அவர் கூறிய ஒவ்வொரு சொல்லும் ஈட்டிபோல் கண்ணனின் மனத்தைத் துளைத்தது.

அவர் கேட்டார்: 'விளைச்சல் நன்றாக இருந்தால் அதிகமாகக் கேட்கிறேனா! குறைந்தால் எப்படி விட்டுக் கொடுப்பது! சூறை விழுந்தது என் நிலம்தான் என்றாலும், அதை உன்னிடம் ஒப்படைத்ததற்காக என் குத்தகையிலும் சூறை விழ வேண்டுமா!'' என்று. அத்துடன் விட்டாரா!

கண்ணனின் நிலத்தில் விளைச்சல் அந்த போகத்தில் அமோகம். அது பசுபதியின் கண்ணை உறுத்தியது. குத்தகையைச் சரிக்கட்ட, அதையும் எடுத்துக் கொண்டுவிட்டார். சாதாரண மன நிலையில் இருந்திருந்தால், இவ்வளவு தூரத்துக்கு விட்டிருக்க மாட்டான் கண்ணன். அவன் திடுக்கிடும்படி பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டு அவன் மன அமைதியையே குலைத்து விட்டார் பசுபதி.

''காத்தான் இறந்த நாளிலிருந்து உன்னைப் பள்ளச் சாகுபடி உனது குடும்பத்துக்கு எனது தர்மமடா. உன் அப்பன் அதன்பேரிலே வாங்கி யிருக்கும் கடனுக்கு, மூன்று வருஷ வட்டி பாக்கி'' என்று அவர் கூறியபோது கண்ணனுக்கு ஏற்பட்ட அதிர்ச்சி அவனை ஊமையாக்கி விட்டது. பிரமித்தபடி அங்கேயே உட்கார்ந்து விட்டவன், இருட்டி வெகு நேரம் கழித்து இப்போதுதான் வீடு திரும்பிக் கொண்டிருந்தான். 'நிலத்தின்பேரில் கடனா! தனக்கும் தாய்க்கும் தெரியாமலா!' புரியாத புதிராகத்தான் இருந்தது, கண்ணனுக்கு இது.

நடந்தது இதுதான். சிறு நிலம் ஒன்று நல்ல விலைக்கு வரவே அதை வாங்கிவிட முடிவு செய்தான் காத்தான். கண்ணனின் பரிசத்துக்கான தனது சேமிப்பை எடுக்க மனம் இல்லாதவனாக, பண்ணையாரிடம் எண்ணூறு ரூபாய் சீட்டுக் கடனாகக் கேட்டான். அவ்வருஷம் குத்தகை போக, கணிசமான மீதம் இருந்தது. சிறுகச் சிறுகக் கடனை அடைத்து விடலாம் என்ற நம்பிக்கையை அளித்தது. இது பற்றிக் கலந்து யோசனை செய்யக் கண்ணன் ஊரிலில்லை. பண்ணைக்கு உரத்துக்காக, ஏற்பாடு செய்யத் தஞ்சாவூர் போயிருந்தான். அவன் வரும்வரை தாமதிக்க நேரமில்லை.

தஞ்சையிலிருந்து திரும்பிய அன்று உரத்தைக் கிடங்கில் சேர்ப்பதில் கண்ணன் முனைந்

இருந்து விட்டான். அன்றுதான் கடன் பத்திரம் ரிஜிஸ்டர் ஆகவேண்டிய தினம். பதிவு அலுவலகத்தில் பணம் பெற்றுக் கொண்டதாகக் கூறிவிட்டு வீடு திரும்பித் தொகையைப் பெற்றுக் கொள்ளலாம் என்று ஏற்பாடு. பதிவாகித் திரும்பும் வழியில்தான், வயலை ஒரு எட்டு பார்த்து வரலாமென்று சென்றான் காத்தான். சென்ற சிறிது நேரத்தில் காத்தான் மீளாத மயக்க மடைந்து விட்டான்.

வீடு சென்ற பசுபதி பணத்துடன் காத்திருந்தார். அவன் காலமாகி விட்டதைக் கேள்விப் பட்டபின் கூட, கண்ணன் வரலாமென்று எதிர்பார்த்தார். விஷயம் யாருக்குமே தெரியாது என்பது அவருக்குத் தெரியாது. நான்கைந்து நாட்களாகியும் யாரும் வராதது கண்டு தாமே வலியச் சென்று பணத்தைக் கொடுத்துவிடத்தான் எண்ணினார். ஆனாலும் மங்களத்தின் கணவனை அவரால், அத்தகைய நல்ல காரியத்தைச் செய்ய முடியவில்லை. பத்திரம் பணம் இரண்டுமே அவரிடம் தங்கிப் போய் விட்டன.

கண்ணன் எடுத்த தீவிரமான முயற்சியில் இந்த விஷயம் முழுவதையும் அவனால் அறியக் கூடவில்லை. அரைகுறையாகத்தான் தெரிந்தது. என்றாலும், கடன் தொகை தந்தையிடம் சேரவில்லை என்று திட்டமாக அவனால் அறிய முடிந்தது. குமுறிய அவன் உள்ளத்தில் கோபத் தீ கொழுந்து விட்டது. அக்கிரமத்தை எண்ணி ஆத்திரப் படுவதைத் தவிர அவனால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை.

## 5

மங்களத்தின் உறவுக்காரருடைய யோசனையின்பேரில், பண்ணையார் மீண்டும் சொந்தச் சாகுபடி தொடங்கி, யாரோ ஒரு ஆள் பண்ணையாளாக வந்திருப்பது கண்ணனுக்குத் தெரிந்தது. தன்னை மீறி எழும் ஆவேசத்தை அடக்கி, பசுபதியைப் பார்க்கச் சென்றான் அவன். தன் குடும்பம் படும் அல்லல்களை மனமுருக விவரித்து, பண்ணையாருக்குத் தான் பட்ட கடன் தீரும் வரையாவது பண்ணையைத் தன்னிடம் ஒப்படைக்கும்படி மன்றாடினான், கெஞ்சினான்.

பசுபதியின் மனம் கரையாத கல்லாகி விட்டிருந்தது. எக்காரணங் கொண்டும் கண்ணனை மீண்டும் பண்ணையாளாக ஏற்க முடியாது என்று பிடிவாதமாகக் கூறினார் அவர்.

கண்ணன் யோசித்தான். 'வாழ்ந்திருந்த ஊரில் தாழ்ந்து விட்டதுகூடப் பரவாயில்லை. காத்தான் காத்த சுருத்தட்டான்குடிப் பண்ணையைத் தன் கண்முன் வேறொருவன் கவனிக்க, தன்னால் பார்த்துக் கொண்டு வாளாவிருக்க முடியுமா! அவ்வூரை விட்டு எங்காவது வேலை தேடிச் செல்வது, என்று முடிவு செய்தவனாக வேலை கிடைக்கும் வரை செலவுக்காகப் பண்ணையாரிடம் இருநூறு ரூபாய் தன் நிலத்தின் மேல் கடனாகக் கேட்டான். பசுபதிக்கும் சரியாகவே பட்டது. மனச்சாட்சி அவரைத் துளைத்தது. தனக்குச் சேரவேண்டியதில் கால் பாகம்தானே கேட்கிறான் என்று உள்ளே போனார். பணப் பெட்டியைத் திறக்கச் சென்றவரை அழைத்த மங்களம் வாமனவதாரம் எடுத்தாள். பசுபதி எவ்வளவோ எடுத்துக் கூறியும் மசியாத அவள், தன் பிரத்தியேகமான குணத்தால் அவர் மனத்தை இரும்பாக்கி விட்டாள்.

உள்ளே சென்ற வேகத்தில் திரும்பி வந்து கையை விரித்த பண்ணையாரிடம், நூறு ரூபாயாவது தரும்படி கேட்டான் கண்ணன்.

"ஏற்கனவே வட்டி முதல் ஏக பாக்கி. போதாக் குறைக்குக் குத்தகை பாக்கி வேறு. நிலத்தின் பேரில் இன்னும் எவ்வளவு கொடுப்பது!"

"சரி போகட்டும் எஜமான். நிலத்தைச் சாஸனம் செய்துக்குங்க. மேல் பணம் ஏதாவது வருமில்லையா! அதையாவது கொடுங்க" என்று பணிவுடன் கேட்டான் கண்ணன்.

பண்ணையார் கடகட வென்று சிரித்தார். "மேல் பணமா! தம்பி கிடைக்காது. எனக்குச் சேரவேண்டிய நிலப் பணத்துக்கே ஈடாகாதே உன் நிலம்."

"என்ன எஜமான். ஒன்னரைக் காணி நிலமா எட்டு நூறுக்கு ஈடாகாது! ஏழை வயிற்றிலே மண்ணை அடிக்காதீங்க, பசிக்கிற வயிற்றின் குமுறல் பயங்கரமானது."

"ஏய் என்னடா பயமுறுத்தறே!"

"அவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டதா! எஜமான்! கடைசியாகக் கேட்கிறேன். உணவுக்கு நாலு மூட்டை நெல்லாவது கொடுங்க."

மங்களத்தைப் பார்த்தார் பசுபதி. கொவ்வைப் பழம் போன்ற அவளது கண்களைப்

பார்த்து மின்சாரம் தாக்குண்டவர் போலானார். அந்த அதிர்ச்சியிலேயே கூறினார்: "சோத்துக்கில்லாதவனுக்கு எல்லாம் கொட்டிக் கொடுக்க இது என்ன சத்திரமா! கேட்கிறது பிச்சை. நாலு மூட்டை வேண்டுமாம்: எங்கேயாவது......" அவர் முடிக்கவில்லை; ஆவேசமாக இடைமறித்தான் கண்ணன்.

"பண்ணையாரே! ஊசி குத்த இடம் தர மறுத்த துரியோதனன் கதியை மறந்துவிடவில்லையே நீ! காத்தானுக்குக் கடனில் எவ்வளவு கிடைத்தது என்று தெரிந்தும் மன்றாடினேன். இப்போது உரிமையுடன் அதிகாரமாகக் கேட்கிறேன். என் நில மாகுல் எனக்கு உடனே வேண்டும். உன் குடி வாழனுமானால் நியாயத்தைக் குழி தோண்டிப் புதைக்காதீங்க. பசி என்னை மிருகமாக்கி விடும்."

"கேட்டுக்கிட்டு நிக்கிறீங்களே, நாயைக் கட்டிவைச்சு உரிக்காமல்" என்றவாறு கையைச் சொடுக்கினான் மங்களம்.

"வேண்டாம் பண்ணையாரே. இது நல்லதற்கில்லை. என் குடும்பத்தை அலங்கோலமாக்கினாய். அதற்குப் பரிகாரமாக இப்போது என் பசி நீங்க உதவினால் பழிவாங்கும் எண்ணத்தை விட்டு விடுகிறேன். மறுத்தால்......" நறநறவென்று நெரிந்த பற்களுக்கிடையில் ஆள்காட்டி விரலைக் கடித்தான் கண்ணன். பிய்ந்த சதையிலிருந்து பீறிய ரத்தத்தைக் காட்டிக் கூறினான்: "மறுத்தால்...இந்த ரத்த சாக்ஷியாக உனக்கு அழிவு நிச்சயம். நாசம் உன்னை நெருங்கி விட்டது. ஒரு வாரத்துக்குள் உன் ரத்தத்துக்கும் இதற்கும் என்ன வித்தியாசம் என்று காணத் தவறமாட்டேன் இது உறுதி."

விழித்துக் கொண்டு நின்ற வேலையாட்களைக் கொண்டு கண்ணனைக் கட்டச் செய்தான் மங்களம். வில் வண்டியின் சாட்டையால் கண்ணனை வீறினார் பகபதி.

## 6

கண் விழித்தபோது தன் வீட்டிலிருக்கக் கண்டான் கண்ணன். சாட்டை முத்தமிட்ட இடங்களில் எல்லாம் மரண வலி. படுக்கையிலிருந்து எழுந்திருக்கவே மூன்று நாட்கள் ஆகி விட்டன. மேலும் மூன்று நாட்கள் மெதுவாக ஊர்ந்தன. கருத்தட்டான் குடியில் இரு ஜீவன்களுக்கு அந்த ஆறு நாட்களும் நரகவேதனை யளித்தன. ஒருவருக்குப் பீதி. மற்றவனுக்கு மன உளைச்சல்.

அன்று ஆறாம் நாள் இரவு! படுக்கையில் சாய்ந்த போது, பகபதிக்கு மனம் துணுக்குற்றது. மறு நாள் அவருக்கு எங்கு படுக்கை இருக்கும்! உறங்கவே பயமாக இருந்தது அவருக்கு. வெகு நேரம் ஆகி விட்டது. படுத்துச் சற்றே கண்ணை மூடியவர் காக்கை கரையும் சப்தம் கேட்டு, விடியற்காலையில் சிறிது உலாவலாம் என்று எழுந்தார். கையில் கத்தியுடன் எதிரே வந்து நின்றான் கண்ணன்.

'முதல் பலியாக்க நினைத்தேன். மூன்றும் பலிதான் நீ. மங்களம், லக்ஷ்மி இருவருக்கும் நிம்மதி கிடைத்து விட்டது. இந்தச் சமயத்திலும் அவர்கள் மேலிருந்த நகைகளைப் பற்றி யோசிக்கிறாய் இல்லையா! மூன்று தலைமுறைக்குப் போதும் எனக்கு, அவைகளை எடுத்துக் கொண்டால். பயப்படாதே. ஒன்றையும் நான் தொடவில்லை. தொடவும் மாட்டேன். பணத்துக்காகக் கொலை செய்யவில்லை நான். பழி தீர்க்கிறேன். நான் பழிகாரன்" என்று அவன் கூறுவதாகப் பகபதிக்குப் பிரமை ஏற்பட்டது.

நெருங்கிய கண்ணன் அதுபோல் ஒன்றும் செய்யவில்லை. பகபதியின் கைகளை இறுகப் பற்றினான். கத்திப் பிடியை அவர் உள்ளங்கையில் வைத்து மூடினான். மார்பை நீட்டியபடி தொண்டை அடைக்க "எனக்கு நிம்மதியளித்துவிடுங்கள் எஜமான்" என்று கூறினான்.

பயங்கரமாக அலறியபடியே படுக்கையிலிருந்து எழுந்தார் பகபதி. கண்ணனின் குடிசையை நோக்கி வேகமாக நடந்தார்.

* * *

மரக் கிளையிலிருந்து தொங்கிய சுருக்குக் கயிற்றைப் பிடித்தவாறு சுமைதாங்கி மீது நின்றிருந்த கண்ணனின் கால்களை ஓடி வந்து இறுகப் பற்றிக் கொண்டார் பகபதி. "கீழே இறங்கு கண்ணு!" என்று உரக்கக் கூவினார்.

"இங்கும் வந்துட்டீங்களா எஜமான். தயவு செய்து என்னைத் தடுக்காதீங்க. பாவி நான். ரொம்ப யோசித்துத்தான் இந்த முடிவுக்கு வந்தேன். நாளை போது விடியும்போது நான் உயிரோடிருந்தால் கொலைகாரனாகி விடுவேன். அதை யாராலும் தடுக்க முடியாது. தலைமுறை தத்துவமாக வேலை தந்து காப்பாற்றிய குடும்பத்துக்கே எமனாக ஆகிவிட என்னுடன் பிறந்து விட்ட குணம் இடங்கொடுக்கவில்லை. கொலை செய்து விட்டு நாளை தூக்கில் தொங்குவதற்குப் பதிலாக, இன்றே நன்றி மறக்காதவன் என்ற பெயரோடு போய் விடலாம் என்று முடிவு செய்தாலும், பசியைத் தீர்த்த பின்தான் உயிர்விட வேண்டும் என்ற வெறியை ஒதுக்கித் தள்ள முடியவில்லை. 'நல்லவனாகச் சாவதா! கொலையாளியாகவா!' என்று யோசித்து முடிவு செய்யும் வேளையில் சோதனையாக நீங்கள் வந்து விட்டீங்க. இங்கே நிற்கும் ஒவ்வொரு விநாடியும் உங்கள் உயிருக்கு ஆபத்து. என் நன்னடத்தைக்கு ஆபத்து. அதற்குள் ஓடி விடுங்க எஜமான். என் உடைமை எல்லாவற்றையும் பறித்துக் கொண்டதில் வருத்தமில்லை. நல்லவனாக உயிர்விடும் என் ஆசையிலும் நீங்கள் மண்ணைப் போடாதீங்க."

கண்ணனின் ஒவ்வொரு வார்த்தையும் பகபதியைச் சித்திரவதை செய்தது. இதைவிட பகபதிக்கு, தண்டனை வேறு என்ன வேண்டும்! கையில் இருந்த கட்டாரியால் கண்ணன் அவரைக் குற்றுயிராக்கி யிருந்தால் கூட இவ்வளவு அவஸ்தையும் வேதனையும் பட்டிருப்பாரா என்பது சந்தேகம். பீறிட்டு வரும் துக்கத்தை அடக்க முடியாதவராக, கோவென்று அழத்தொடங்கி விட்டார் அவர். "குணச் செல்வமடா கண்ணு நீ. பழைய பண்ணை பகபதி செத்து விட்டான். என்னை மன்னிக்கும்படி கேட்கக்கூட நா கூசுகிறது!" கண்ணனை அணைத்தபடி விம்மலுக்கிடையே கூறி முடித்தார் பகபதி. அணைந்திருந்த, மனிதத் தன்மை எனும் ஸ்வர்ண விளக்கு அவர் மனத்தில் மீண்டும் சுடர் விட்டு முகத்தில் அமைதி ஒளியை வீசிற்று.

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10 Editor: Mi. Pa. Somasundaram




## நம் நாட்டில் சராசரி ஒருவருக்கு 15 கஜம் துணி தான் உற்பத்தியாகிறது. 1960 ம் வருடத்தில் ஒருவருக்கு 22 கஜம் துணி உற்பத்தி செய்வது துணி நெய்யும் தொழிற் சாலைகளின் திட்டம்

30 ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டின் உபயோகத்திற்கு வேண்டிய துணிகள் பூராவும் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு வந்தன. ஆனால் இப்பொழுதோ நம் நாடு உலகத்திலேயே துணி உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளின் பெருக்கத்தில் இரண்டாவது ஸ்தானம் வகிக்கிறது. இந்த முக்கிய தொழிற்சாலையில் நம் நாட்டின் 100 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. மேலும் 10 லக்ஷம் தொழிலாளர்கள் இங்கு வேலை செய்கிறார்கள். 500 கோடி கஜம் துணிகள் மில் வருடமும் உற்பத்தி செய்யப்பட்டு வருகின்றன. நம் நாட்டின் வளரும் பொருளாதாரத்துக்கு அதிக அவசியமானது. இதனாலேயே டாடா அயர்ன் அண்டு ஸ்டீல் கம்பெனியார் தங்களுடைய தொழிற்சாலையின் உற்பத்தியை அதிகப்படுத்துவதற்காக பல்வேறு திட்டங்களை கையாண்டு வருகிறார்கள்.

**இரும்பு உற்பத்தி:**

| | | |
|---|---|---|
| 1955 | ... | 1,050,000 டன்கள் |
| 1959 | ... | 2,000,000 டன்கள் |

**தனியார் தொழில் தேச நலனுக்காகப் பாடுபடுகிறது**

**தி டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிட்.**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon